# NOOR-UL-ISLAM

# நூருல்-இஸ்லாம்

نور الاسلام مدراس

மலர்-6 | ஹிஜ்ரீ 1364ஹு ஸபர்மீ | இ-3
கி. பி. 1945ஹு ஜனவரிமீ

| நெ. | விஷய அட்டவணை | பக்கம் |
|---|---|---|


"நூருல் இஸ்லாம் ஆபீஸ்,"
65. பிராட்வே, ஜார்ஜ் டவுன், மதராஸ்.

بسم الله الرحمن الرحيم
نحمده ونصلي على رسوله الكريم

# நூருல் இஸ்லாம்

(ஓர் உயரிய செந்தமிழ் மாசிகை)

# NOOR-UL-ISLAM

(AN EXCELLENT TAMIL MONTHLY)


ஆசிரியர் : A. N. ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவீ)

மலர் - 6 | ஹிஜ்ரீ 1364ஹு ஸபர்மீ | கி. பி. 1945ஹு ஜனவரிமீ | இ - 3


## குர் ஆன்

"(ஏ நபியே!) அவர்களுக்கு (தின்னுவ
தற்கு) ஆகுமாக்கி வைக்கப்பட் டிருக்கிறது.
எவை என்று உம்மிடம் (மனிதர்களான)
அவர்கள் வினவுகின்றனர். (எனவே அவர்க
ளுக்கு) நீர் (பின் காணுமாறு) கூறுவீராக:
பரிசுத்த மணமானவைக ளெல்லாம் (நீவிர்
தின்னுவதற்காக) உங்களுக்கு ஆகுமாக்கி
வைக்கப்பட்டிருக்கின்றன. மேலும் அல்
லாஹ் உங்களுக்குக் கற்பித்தபடி, வேட்டை
யாடும் உயிர் ஜீவன்களுக்கு நீங்கள் கற்றுக்
கொடுத்திருக்கின்றீர்களே அதுவும், (நீங்கள்
தின்னுவதற்கு இலாயிக்கானதாகும்) என
வே, (உங்கள் உத்திரவுபடி) உங்களுக்காக
அவைகள் தடுத்துக்கொண்டு வருபவைகளை
நீங்கள் (தாராளமாய்) தின்னலாம். மேலும்
இங்ஙனம் கொண்டுவரப்பட்ட தின்னத்
க்க) அதன்மீது அல்லாஹ்வின் நாமத்தை
(தக்பீரை)க் கூறுவீர்களாக. (எவ்விஷயத்
திலும் அல்லாஹ்வின் எல்லையைக் கடக்காம
லிருக்கவேண்டும்.) எனவே, அல்லாஹ்வுக்கு
அஞ்சி நடந்துகொள்ளுங்கள். நிச்சயமாக
, அல்லாஹ்வானவன் (மனிதர்களின்
செயல்கள் சம்பந்தமாய்க்) கேள்வி கேட்ப
தில் மிகவும் தீவிரமானவனு யிருக்கிறான்."
(மாயிதா - 5 : 4)

"பரிசுத்த மணமான வஸ்துக்களெல்லாம்
இன்று (இதுசமயம் பொதுவாய் நீங்கள்
தின்னலாம் என) உங்களுக்கு ஆகுமாக்கப்
பட்டிருக்கிறது. (இதுமட்டுமா? மேலும்
வேதமளிக்கப் பட்டவர்களாய் விளங்கும்
அவர்களின் ஆகாரமும் உங்களுக்கு ஆகுமாக்
கப்பட்டிருக்கின்றன. உங்களுடைய ஆகாரங்
களெல்லாம் அவர்களுக்கு(ம் அப்படியே)
ஆகுமாக்கப்பட்டிருக்கின்றன. மேலும் (நீங்
கள் விவாகம் செய்துகொள்ளும் வகையில்)
மூஃமினான (நன்னம்பிக்கைகொண்ட) சுயே
ச்சையான பெண்களும், உங்களுக்கு முன்
னே வேதமளிக்கப்பட்டவர்களி லுண்டான
சுயேச்சையான பெண்களும் (உங்களுக்கு
ஆகுமாக்கப் பட்டிருக்கின்றனர். எனினும்)
நீவிர் அவர்களுக்கு அவர்களின் பிரதி பலன்
களை (மஹர் தொகைகளை)க் கொடுத்துவிட
வேண்டும். (அப்பெண்களை நீங்கள்) சுயேச்
சையானவர்(களான மனைவி)களாக, துர்க்
கிருத்திய மற்றவர்களாய், மறைவாய் கெட்
ட காரியங்களுக் குட்படாதவர்களாய்,

(வைத்துப் பாதுகாக்கவேண்டும்). எனவே, (உண்மை விஷயங்கள் வெளியானதன் பின்னும்) எவரேனும் நன்னம்பிக்கைக்கு மாறு செய்வாராயின் நிச்சயமாகவே அவருடைய (நற்)கிரியை(கள்) அழிந்துபோகும். மேலு மவர் இறுதி(கியாமத்) நாளில் நஷ்டவாளிகளுள் சேர்ந்தவரா யிருக்கிறார். (என்பதைத் திண்ணமாய் நீங்கள் நம்பவேண்டும்.)" (மாயிதா - 5 : 5)

"ஏ நன்னம்பிக்கை கொண்டவர்காள்! நீங்கள் தொழுகைக்காகத் தயாராயிருப்பீர்களாயின், (தொழுகைக்குமுன்) உங்கள் முகங்களைக் கழுவிக்கொள்ளுங்கள்); மேலும் மணிக்கட்டுகள்வரை உங்கள் கரங்களையும் (கழுவிக்கொள்ளுங்கள்); இன்னம் உங்கள் சிரங்களைத் (தண்ணீர்கொண்டு) தடவி (துடைத்து)க்கொள்ளுங்கள்; கரண்டைகால் வரை உங்கள் பாதங்களையும் (கழுவிக்கொள்ளுங்கள்). மேலும் குளிக்கவேண்டிய அவசியமிருப்பின் (ஸ்நானம் செய்து) பரிசுத்தமாகி விடுவீர்களாக. இன்னம் (நீங்கள் தண்ணீரைத் தீண்டமுடியாத நிலைமையில்) வியாதியுற்றவர்களாயிருப்பின், அல்லது (தண்ணீர் கிட்டாத பாகத்தில்) பிரயாணம் செய்கின்றவர்களாயிருப்பின், அல்லது உங்களில் ஒருவன் மலபாதை கழிக்கு மிடத்தினின்றும் வெளிவருவானாயின், அல்லது நீங்கள் பெண்பிள்ளையை (பெண்டாளும்வகையில்) தொடுவீர்களாயின் பின்னர் நீங்கள் தண்ணீரை(ச் சுத்திசெய்துகொள்ள) பெற்றும் கொள்ளவில்லையானால், பரிசுத்தமான மண்ணைக் கொண்டு வேலையை முடித்து (சுத்தமாக்கிக் கொள்ளுங்கள். (எப்படியெனின்,) உங்கள் முகங்களை (மண்ணைக் கரங்களால் தட்டி)த் தடவிக்கொள்ளுங்கள்; அதே மண்ணினால் உங்கள் கரங்களையும்(தடவிக்கொள்ளுங்கள்). அல்லாஹ் (இச்செய்கைகளால்) உங்களுக்குக் கஷ்டத்தைக் கொடுக்க விரும்புகிறானில்லை. ஆனால், உங்களைப்பரிசுத்தமாக்கவும், நீங்கள் நன்றி யுள்ளவர்களாய் விளங்குவதற்காகத் தனது அருட்கொடையை பூர்த்தி செய்யவுமே விரும்புகிறான்." (மாயிதா - 5 : 6)

---

நமது கொழும்பு ஏஜண்டு:

**ஜனாப் A. L. M. ஸலீம்,**
58, இரண்டாம் குறுக்குத் தெரு,
கொழும்பு.



அல்லாஹு அக்பர்! முஸ்லிம்லீக் ஜிந்தாபாத்!!
வருடச் சந்தா ரூ. 3. (சந்தா முன் பணம்)

# நூருல் இஸ்லாம்

## எல்லாம் நன்மைக்கே!

உலகில் நிகழ்வன வெல்லாம் நன்மைக்கே என்பது நம் இஸ்லாம் மத தத்துவம். ஏன்? உலக நிகழ்ச்சிகளனைத்தும் ஆண்டவனின் ஆணைப் படியே நடைபெறுகின்றன. ஆண்டவனோ என்றென்றும் எல்லோருக்கும் நன்மை நாடுபவனாகவே இருக்கிறான். அவ்வாறெனின், ஒரே விஷயம் ஒருவருக்கு நன்மையாகவும், மற்றவர்களுக்குத் தீமையாகவும் காணப்படுவதன் காரணம் என்ன எனும் ஐயப்பாடு எழுதல் இயல்பு. அது அவரவர்களின் மனோ பான்மையையும், பகுத்தறியும் திறனையும் பொறுத்திருக்கிறது. உலக நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் நன்மைக்கெனவே நடைபெறுகின்றன வென்பதற்கு நாம் கணக்கற்ற உதாரணங்களைக் காட்ட இயலும். எனினும், விரிவு கருதி ஒரு சிலவற்றை ஈண்டு விளக்க முற்படுகிறோம்.

இதுகாலை நம் நாட்டின் வறுமைக்குரிய காரணங்களில் ஒன்றாய் சமைந்துள்ள உலகயுத்தத்தைப்பற்றி முதலில் கூறுவோம். உலகயுத்தம் ஆரம்பமாகி, இன்றைக்கு ஆறாண்டுகளாக வெற்றியும், தோல்வியும் மாறி, மாறி வருகின்றன. ஒருசில சமயங்களில் பிரிட்டன், அமெரிக்கா முதலிய நேச நாட்டினர் தோல்வியுற்று, நசித்துவிடக் கூடிய நிலையும் நேரிட்டது. அதுவும் நன்மைக்கே என்றுதான் நாம் கருதினோம். ஏனெனின், அன்று அன்னோருக்கு அந்நிலை ஏற்பட்டதால்தான் அவர்களின் மனதில் ஆண்டவன்பால் தீவிர நம்பிக்கையும், வெற்றி காணவேண்டுமென்ற தீவிர உணர்வும், அவ்வுணர்வால் இடையறா உழைப்பும், அதனால், இன்று ஏற்பட்டுள்ள வெற்றியின் முகப்பும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றலாயின. அன்று வெற்றிகண்ட அச்சு நாட்டினர், ஆரம்ப முறுக்கு அதிகரிப்பால், அறுந்து வீழ்ந்து, இன்று தங்கள் உயிருக்கே அஞ்சி ஓடிஒளிய நேரிட்டுவிட்டது. இதுவன்றி வெற்றியும், தோல்வியும் மாறி மாறி வருவதால், யுத்தக் கட்சியினர் இருபாலாருக்கும் வெற்றி, தோல்விகளின் பலாபலன்கள் தெரிய வழி ஏற்படுகிறது. இவை யனைத்தும் நன்மைக்கே யன்றோ?

அடுத்தபடியாக இங்கிலாந்திலிருந்து சமீபத்தில் இரண்டு திடுக்கிடத் தக்க செய்திகள் வந்தன. பிரிட்டனின் முதலமைச்சர் சர்ச்சில் இறந்துவிட்டதாக ஒரு செய்தி பறந்தது. "ஹா! நானா இறந்தேன். இதோ உயிரோடிருக்கிறேனே!" என்று தன் உருவத்தை அநேகரிடம்காண்பித்து, மறுப்பு கூறவேண்டிய நிலை சர்ச்சிலுக்கு ஏற்பட்டுவிட்டது. இதுபோன்றே உலக நாவலரான முது கிழவர் பெர்னார்டு ஷாவும் இறந்துவிட்டதாக மற்றொரு செய்தி. "என்னை இதற்குள் ஏன் கொன்றுவிட்டீர்கள்?" என்று மறுப்பு கூறினார் மிஸ்டர் ஷா. இதுவும் நன்மைக்கே என்பதுதான் நம் கோட்பாடு. ஏனெனில், ஒருவனுக்கு அபாயமோ, அல்லது உயிருக்கு ஊனமோ ஏற்படுங் காலத்துதான் அவன் அது

காறும் செய்த தீமைகள் மறைந்து, நன்மைகள் வெளிப்படும். அதுபோது தான் அவன் நல்லவனுயினும் சரி, அல்லவனுயினும் சரி, அவன்பால் பொதுவான ஓரன்பு ஏற்படும். இதுவே உலக இயல். இதுபோன்றே சர்ச்சில், பெர்ஞர்டு ஷா 'மரண'த்தைக் கேள்வியுற்ற மக்களுக்கு, அவர்கள் இதுகாறும் செய்த நன்மைகளனைத்தும் புலனுகி, அவர்கள் மீது அன்பும், ஆதரவும் ஏற்பட்டுள்ளது. மறுப்புச் செய்தி வெளியானவுடன் இந்த அன்பும் ஆதரவும் மறைந்துவிடாமல், பன்மடங்கு பெருகிவிட்டதென்பது கண்கூடு. ஆனல், ஸுபாஷ் போஸ் இறந்துபோனதாகச் செய்தி வெளிவந்ததும், சற்றும் தயங்காமல் அனுதாபம் அறிவித்த காந்தியார் மட்டும் இம்முறை மேற்கண்ட இருவருள் எவருக்கும் அனுதாபம் விடுக்காமல் தப்பித்துக் கொண்டுவிட்டார். இதுவும் நன்மைக்கே!

இப்போது நம் உள் நாட்டு (இந்தியா) விஷயங்களுக்கு வருவோம். நாட்டில் நடமாடும் கட்சிகளுக்குக் கணக்கு வழக்கில்லை. மூலைக்கு மூலை தனிக் கட்சிகள்தான். மதப்பிரசாரத்திற்கென ஆரம்பமான கட்சியும் இன்று அரசியல் கட்சியாகியது; தேச சரித்திரத்தை ஆராயப்புகும் குழுவினரும் அரசியல் கட்சியினராயினர். (பிறிதோர் புறம் தோன்றும் மௌலானு ஸையத் ஸுலைமான் நத்வி அவர்களின் "சரித்திரத்தில் வகுப்பு வாதம்" என்னும் உரை காண்க); மாணவர் முன்னேற்றங் கருதி அமைக்கப்பட்ட கட்சியும் அரசியல் கட்சி ஆகியது; சமூக சீர்திருத்தத்திற்கென தோன்றியதும் அரசியல் கட்சியாம். ஒன்று "ஐக்கிய இந்தியா" கோருகிறது; மற்றென்று "இந்தியப் பிரிவினை கோருகிறது"; வேறென்று "அகண்ட ஹிந்துஸ்தான்" என அலறுகிறது; இன்னுமொன்று "திராவிடஸ்தான்" எனக் கிளம்புகிறது; இதுபோன்ற இன்னும் எண்ணற்றன. இவைகளன்றி, எல்

(103-ஆம் பக்கம் பார்க்க)

## "நோயற்ற வாழ்வே ∴ ∴ ∴ ∴ ∴ ∴ குறைவற்ற செல்வம்"

**முஸ்லிம் சோதரர்களே,**

அஸ்ஸலாமு அலைக்கும்.

புதுக்கோட்டை பெரிய ஆஸ்பத்திரியில் நம் முஸ்லிம்களுக்கெனத் தனி 'முஸ்லிம் வார்டு' ஒன்று நிர்மாணிக்க முடிவு செய்யப்பட்டுள்ளது. இதற்கு ரூ- 50,000 செலவாகுமென மதிப்பிடப் படுகிறது. தருமங்களில் இப்பொதுக் காரியத்துக்கு அளிக்கப்படும் தருமமும் சிறப்புடையதாகும். புதுக்கோட்டை சமஸ்தானத்தில் மட்டுமின்றி சமஸ்தானத்துக்கு வெளியே யுள்ளவர்களும் மானிடத்துவ கைங்கரியத்தை முன்னிட்டு இதற்குத் தாராள நன் கொடை யளித்துதவலாம். ஆதலால்,

ஆங்காங்குள்ள முஸ்லிம் சோதரர்கள், தங்கள் தங்களாலியன்ற நன்கொடைகளைத் தங்கள்பெயர், விலாசம் முதலிய விவரங்களுடன், இதரர்களிடமும் வசூல் செய்து அனுப்பி, ரசீது பெறுமாறு கோரப்படுகின்றனர். ஆண்டவன், இந்த நன் கொடை தருமத்திற்கேற்ற நற்பயனை அளிப்பானென்பது நிச்சயம்.

வஸ்ஸலாம். இங்ஙனம்,

**K. S. காதர் சாஹிப்,**

| தெற்கு மூன்ருவது தெரு, புதுக்கோட்டை. | காதிரியா பேர்பியூமரி ஹால், 44, மூன்ரும் குறுக்குத் தெரு, பேட்டை, கொழும்பு. |
| --- | --- |

# ஆராய்ச்சி மேடை

**மீலாத் ' மலர் :**

நம் "நூருல் இஸ்லாம்" அடுத்த இதழ் "மீலாத் மலர்" ஆக வெளியிட முடிவு செய்யப் பட்டுள்ளதைக் கேட்டு வாசக நேயர்கள் மகிழ்ச்சி கொள்வரெனக் கருதுகிறோம். நாம் "மீலாத் மலர்" ஆண்டு தோறும் வெளியிட்டே வருகிறோமாயினும், இவ்வாண்டு அதனை விசேஷ மலராகத் திகழும்படி செய்ய ஆவற்படுகிறோம். குறைந்த பட்சம் 120-பக்கங்கள் வெளியிட முடிவு. இருவர்ணங்களில் தீட்டப்பெற்ற கவர்ச்சியான முகப்பும், உட்புறங்களில் இருவர்ணங்களில் தலைப்புகளும், கட்டுரைகளும் நம் மனத்தகத்தே காட்சி தருகின்றன. எல்லாவற்றுக்கும் ஆண்டவன் போதுமானவன்.

இது விஷயத்தில் நம் கட்டுரையாளர்களுக்கும், சந்தா சோதரர்களுக்கும், ஏஜண்டுகளுக்கும் சில வார்த்தைகள் கூற விரும்புகிறோம். 'மீலாத் மலர்' விலை தனிப் பிரதி அணு 12 ஆக ஏற்படுத்தியுள்ளோம். சந்தா சோதரர்கள், தங்களின் அந்த மாதத்திற்குரிய சந்தா நான்கணுபோக, எஞ்சிய எட்டணுவை அனுப்பிவிடுமாறு கோரப்படுகின்றனர்; இல்லையாயின், அவர்கள் சந்தா கணக்கில் எட்டணு அதிகமாக பற்று எழுதிக்கொள்ளப்படும். இதனுல் அவர்களின் சந்தா, இயல்பாக முடிவுறுவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே முடிவுற்றுவிடும்.

எழுத்தாளர்கள், நாயகம் (ஸல்) அவர்கள் சம்பந்தமான கட்டுரையன்றி வேறு எதுவும் இம்மலரில் இடம் பெறமாட்டா வென்பதை மனத்திற் கொள்ள வேண்டும். ஆதலின், அவர்கள், தங்கள் புகைப்படங்களுடன் நாயகம் (ஸல்) அவர்கள் சம்பந்தமாக நம் "நூ. இ." வில் 4-பக்கங்களுக்கு மேற்படாமல், கட்டுரைகள் வரைந்து 1945 பிப்ரவரிமீ 5-ம் தேதிக்குள் இங்கு கிடைக்குமாறு அனுப்பிவிட வேண்டுமாக நாம் விரும்புகிறோம்.

ஏஜண்டுகள், தங்களுக்குத் தேவையான பிரதிகளின் கிரயத்தை முன்பணமாக பிப்ரவரிமீ 5உ க்குள் இங்கு கிடைக்குமாறு அனுப்பிவிட வேண்டுமென விரும்புகிறோம்.

**பொறுப்பாளி யார்?:**

சென்றவாரம் அ. இ. முஸ்லீம் லீக் செயல் கமிட்டியார் சென்னை வந்த விவரங்களை வாசக நேயர்கள் அறிவர். அவர்கள் ஈண்டு வரு முன், சென்னை மாகாண முஸ்லிம் லீக்கில் ஒரு பெரும் நெருக்கடி ஏற்பட்டு விட்டது. அதன் விவரம் இதுதான். செயல் கமிட்டியார், சென்னை மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்ய விரும்புவதாக ஒரு தேதியைக் குறிப்பிட்டு, சென்னை மாகாண முஸ்லிம் லீக்குக்கு அறிவித்தனர். அதனை ஒத்திவைக்குமாறு சென்னை லீக்கினர் கோரினர். செயல் கமிட்டியார் நிராகரித்தனர். அதற்குப்பின் மாகாண லீக்கினர் என்ன செய்தனரென்பது குறித்து பேச்சு மூச்சே காணும். ஆதலால் ஜனுப் அப்துல் ஹமீத்கான், செயல் கமிட்டியாரின் சுற்றுப் பிரயாணத் திட்டத்தை வகுத்து, இம்மாதம் 14உ சென்னை வாலாஜா மஸ்ஜிதில் பொதுக்கூட்டம் நடத்த போலீஸ் கமிஷனரிடம் அனுமதி கோரினர். போலீஸ் கமிஷனரோவெனில், ஏற்கெனவே மாகாண லீக்கிலிருந்து அனுமதி கோரப்பட்டிருப்பதால் இருதரப்பாருக்கும் அனுமதியில்லை யென மறுத்துவிட்டார், அப்போது தான் மாகாண லீக்கினரின் திரை மறைவு ஏற்பாடுகள் வெளியாயின. உடனே மாகாண லீக்கினருக்குக் கோபம் வந்துவிட்டது. தங்கள் ஏற்பாட்டை ஒப்புக்கொள்ளாவிடில் பதவிகளிலிருந்து ராஜினாமா செய்வதாக நவ்வாப்ஜாதா அவர்களுக்கு நள்ளிரவுத் தந்திகள் பறந்தன. உடனே நவ்வாப்ஜாதா, மாகாணலீக் ஏற்பாட்டை ஏற்று, மாகாணலீக்கினர் ஜனுப் அப்துல் ஹமீத்கானுடன் ஒத்துப்போக வேண்டுமெனக் கோரிக்கொண்டார். மாகாணலீக் வேண்டுகோட்படி ஜனுப் அப்துல் ஹமீத்கான் தாம் போலீஸ் கமிஷனரிடம் செய்திருந்த மனுவை வாபஸ் பெற்றதால் மாகாண லீக்குக்கு கூட்டம் நடத்த அனுமதியளிக்கப்பட்டது. இவ்விதமான திர்ஷ்ட நிலைமைக்குப் பொறுப்பாளி யார்? வாசக சோதரர்களின் முடிவுக்கு விடுகிறோம்.

எது எவ்வாறிருப்பினும், சென்னை மாகாண லீகில இப்போட்டி இன்று நேற்றல்ல கடந்த நான்காண்டுகளுக்கு முன்னரிருந்தே நிலைத்து நிற்கிறது. இப்போட்டிக் கட்சிகளில் ஒன்று "ஜமால் கட்சி;" மற்றொன்று "ஹமீத்கான் கட்சி" என்று கூறப்படுகிறது. ஆனல் மக்களுக்கு இருதரப்பார்மீதும் மனக்கசப்புதான் ஏனெனின், 'ஜமால் கட்சி' யார் போது

மான அளவு சமூக, தேசப்பணி ஆற்ற வில்லை யென்ற குறை. மற்றொருபுரம் 'ஹமீத்கான் கட்சி' யார். 1940-ஆம ஆண்டில் சென்னையில் நடைபெற்ற அ இ. முஸ்லிம் லீக் மகாநாடு சம்பந்தமான கணக்குகளை மக்கள்முன் சமர்ப்பிக்கவில்லையென்ற குறைபாடு. இக்குறைபாடு நிலைத்திருக்கும் வரை சென்னை மாகாண முஸ்லிம்களுக்கு ஓர் இழுக்கு ஆதலின், இக்குறைபாடுநீங்கி, இருபோட்டிக் கட்சியாரும் ஒன்றுபட முயற்சிப்பதே சிறப்புடையதா மென்பதை முஸ்லிம் லீக்கினர் உணர வேண்டுகிறோம்

**அந்தோ மறைந்தார்:**

திருவண்ணாமலை ஜனாப் முஜீபுத்தீன் பஹரீ (ஜமாலி) அவர்கள் கடந்த 22-12-'44-ல் தமதில்லத்தில் காலமான செய்தி (இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்) நம்மை திடுக்கிடச்செய்து விட்டது. பரந்த நோக்கமும், சீர்திருத்த ஆர்வமும் கொண்ட மர்ஹூமுக்கு இன்னும் 27-வயதுகூட நிரம்பவில்லை. திருவண்ணாமலையில் பிரபல மௌல்வி முஹம்மத் உஸ்மான் பஹரீ மர்ஹூம் அவர்களின் புத்திரர்; பாக்கியாத், ஜமாலியா அரபிக் கல்லூரிகளில் கல்விபயின்று அதிப் பாஜில் ஆனவர்; "தாருல் இஸ்லாம்," 'பாரததேவி" பத்திரிகாலயங்களில் உப ஆசிரியராக இருந்தவர்; "நூருல் இஸ்லாம்" எழுத்தாளர்களில் ஒருவர்; ஜனாப் டி. எப். ஆர். மஆலிசாஹிப் அவர்களின் மைத்துனர், இறக்குந் தருவாயில் இராணுவத்தின் உர்தூ முன்ஷீயாக இருந்தார் அரபி, உர்தூ, பார்ஸி தமிழ், ஆங்கிலம் முதலியவற்றில் போதிய பயிற்சியுடையவர். அன்னார் பிரிவு திருவண்ணாமலை முஸ்லிம்களுக்கு மட்டுமல்ல; தமிழ் முஸ்லிம்களுக்கே கஷ்டமெனக் கூறுதல் பொருந்தும் அன்னாரின் ஆன்மா சாந்தி பெறுக குடும்பத்தினருக்கு ஆண்டவன் ஸபுரை அளிப்பானாக. மர்ஹூம் அவர்களின் பிரிவால் வருந்தும் குடும்பத்தவருக்கும், குறிப்பாக சோதரர் ஜனாப் டி. எப். ஆர். மஆலிசாஹிப் அவர்களுக்கும் நம் மனப்பூர்வமான அனுதாபத்தை அறிவிக்க விழைகிறோம்.

**ஊதிய உபசாரங்கள் கிடையா:**

நம் "நூருல் இஸ்லாம்" இதழ்களில் வெளிவரும் கட்டுரைகளை வரைந்த எழுத்தாளர்களுக்கு நாம் ஏதோ ஊதிய, உபகாரங்கள் செய்வதாக வதந்தி உலவுகிறதென அறிகிறோம் நம் "நூ. இ" வின் எழுத்தாளர்கள் தன்னலமற்ற தொண்டில் ஆர்வமுள்ளவர்கள் அவர்களுக்கு ஊதிய உபகாரங்கள் ஏதும் நம்பாலிருந்து கொடுக்கப்படவேயில்லை. ஊதியத் தொண்டு நிலைத்திராதென்பதே நம் கருத்து ஆதலின் ஊதியத்திற்கென எந்த எழுத்தாளரையும் ஏற்படுத்தவில்லை, நம் எழுத்தாளர்களும் நம்மிடமிருந்து எவ்வகை ஊதிய உபகாரத்தையும் எதிர்பாராது பணியாற்றி வருகின்றனர். அன்னாருக்கு நம் மனப்பூர்வமான நன்றியும், நம் கட்புரிமையும் உரித்தாகுமென்பதை அறிவித்துக் கொள்ளுகிறோம்.

## "நூருல் இஸ்லாம்"

விற்பனை ஏஜெண்டுகள்

1. T. S. A. ரசூல்,
   பாலக்கரை, திருச்சி.
2. K. M. ராஜா முஹம்மத்,
   B. P. M. முஹம்மதியாபுரம்,
   திண்டுக்கல்.
3. S. D. யூசுப்,
   53, ஜமீமா ஸ்டோர், ஹப்புத்தளை,
   சிலோன்.
4. S. நல்லதம்பி,
   நியூஸ் ஏஜன்ட், கிராண்ட் பஜார்,
   மன்னார், சிலோன்.
5. S. M. ஜமால் மொஹிதீன்,
   ஹமீதா நியூஸ் ஸ்டால் மெயின் ஸ்டிரீட்,
   பந்தாரவிளை, சிலோன்.
6. N. சின்னையா,
   C/o P.A. ஹமீத் பந்தாவா, போல்காவிலை,
   சிலோன்.
7. K. சாந்து முஹம்மது ராவுத்தர்,
   ஆண்டவர் ஸ்டோர்ஸ், நாயுடுபுரம்,
   கொடைக்கானல்.
8. M. N. S. அப்துல் மஜீத்,
   68, மெயின் ஸ்டிரீட், ராகவனை, சிலோன்.
9. முஹம்மத் தமீம் & கோ.,
   13, 15, கண்டி ரோட், கம்பளை,
   சிலோன்.
10. E. K. மொய்தீன்,
    49, மெயின் ஸ்டிரீட், ஹலீலா,
    சிலோன்.



(100-ஆம் பக்கத் தொடர்)

லாக் கட்சியின் கருத்தையும் ஒன்று திரட்டி, ஒரு புதுவழி காண முற்படுவதாகக் கூறிக்கொண்டு அநாமதேயக் கட்சி (ஸாப்ரூ) ஒன்று கிளம்பியிருக்கிறது. இவையெல்லாம் தொடர்ந்து நீடித்து தாண்டவ மாடிக்கொண்டே இருந்தால் நன்மையெனக்கருதி, ஒயுங்கால் தூபமிட்டு வளர்க்கிறது எல்லோரின் மீதும் ஆதிக்கம்வகித்துவரும் அந்நியக் கட்சி. இவ்வாறு பலப்பல கட்சிகள் தோன்றியிருப்பதெல்லாம் நன்மைக்கே என்றுதான் நாம் கூறுவோம். ஏன்? இந்தியாவில் உள்ள சமுதாயங்கள் இரண்டே. அவற்றில் ஒன்று ஹிந்து; மற்றொன்று முஸ்லிம். இவ்விரு சாரருள் முஸ்லிம் சமுதாயத்தினர் மட்டுமேதான் "இந்தியப் பிரிவினை" கோருகின்றனர். இதர "அகண்ட ஹிந்துஸ்தான்", "திராவிடஸ்தான்", "ஐக்கிய இந்தியா", "ஒரே மத்திய சர்க்கார்", "தேசீய ஆட்சி" முதலிய வெவ்வேறு கோரிக்கைகள் எல்லாம் ஹிந்துக்கள் பாலிருந்தே கிளம்பியிருக்கின்றன. இதிலிருந்து ஹிந்துக்களிடையே வேறுபாடுகளும், முஸ்லிம்களிடையே ஒரே கட்டுப்பாடும் இருக்கிறதென்பதை உலகம் அறிந்துகொள்ளுமன்றோ? தவிர தங்களுக்குள் ஒன்றுபட இல்லாத ஹிந்துக்கள், ஒரே ஐக்கிய இந்தியாவில் முஸ்லிம்களுடன் ஒன்றுபட இயலாதென்பதை ஆளும்வர்க்கமாகிய பிரிட்டிஷாரும் அறிந்துகொள்வரன்றோ? ஹிந்துக்களின் பலப்பல கோரிக்கைகளுக்குள் ள தனித்தனி ஆதரவைக் காட்டிலும், முஸ்லிம்களின் பாக்கிஸ்தான் கோரிக்கைக்கே அதிகமான ஆதரவு இருக்கிறதென்பது இப்போது தெளிவு படுகிறதல்லவா? இவைகளெல்லாம் ஏன்?

முஸ்லிம் லீக் ஸ்தாபன விஷயங்களை இப்போது கவனிப்போம். ஒவ்வொரு மாகாணத்திலும் முஸ்லிம்லீக் ஸ்தாபனத்தின் தகராறும், கருத்து வேறுபாடுகளும் தோன்றித் தோன்றி மறைந்தன. தகராறு தோன்றுங்கால் பிரமாத விளம்பரப் படுத்துகின்றன காங்கிரஸ் செய்தித் தாள்கள். சமரசம் ஏற்பட்டுவிட்டாலோ, பேச்சு மூச்சே காணோம். இது அவைகளின் இயல்பு. முஸ்லிம் லீக்கிடை இவ்வாறு தகராறுகள் தோன்றுவதும் நன்மைக்கே! ஏன் என்பதை விளக்குவோம். மிகப்பெருக்கமான உறுப்பினர்கள் கொண்ட பொது ஸ்தாபனங்களில் ஊழல்கள் ஏற்படுவது கண்கூடு. அவ்வூழல்கள் மிஸகக்கும் காலத்தில், நன்மை,தீமை எவை என்ற பாகுபாடுகள் தோன்றா நிற்கும். இந்த வகையில் இன்று முஸ்லிம் லீக் ஸ்தாபனங்களில் தோன்றிவரும் தகராறுகள் அனைத்தும், தலைவர் காயிதே அஃலம் அவர்கள் தலையீட்டாலோ, அன்றி வேறுமுஸ்லிம் தலைவர்கள் தலையீட்டாலோ தீர்ந்துவிடுகின்றன. இவ்வாறு தீருங்காலத்தில் தவறிழைத்தவர்கள், தங்கள் தவறுணர்ந்து, திருத்திக் கொள்ள வசதி ஏற்படுகிறது. இதனால், அந்த ஸ்தாபனத்தின் பலமும், அதன் தலைவர்களின் நிர்வாகத் திறனும் உலகினுக்கு வெளிப்படுகின்றன. இவற்றால் அந்த ஸ்தாபனத்தின் நோக்க வெற்றியும் சமீபித்து விடுகிறது. **இதுவும் நன்மைக்கே அல்லவா?**

இறுதியாக நம் **"நூருல் இஸ்லாம்"** இதழின் அச்சகம், காரியாலயம் முதலியவைகளைப் பற்றியும் ஈண்டு குறிப்பிட விழைகிறோம். இது நம் வாசக சோதரர்களுக்கு ஓரளவு மகிழ்ச்சிதருமென்பதே நம் கருத்து. "நூருல் இஸ்லாம்" தோன்றி இன்றைக்கு ஐந்தாண்டுகளுக்கு மேலாகப் பலப்பல அச்சகங்களில் அச்சிடப்பட்டு வந்ததென்பதை சோதரர்கள் அறிவர். இதனால் நமக்கேற்பட்ட செலவுகள் அளவுமீறியவை. வரவோ சொற்பம்; செலவோ அமிதம். பொருளாதார நெருக்கடி. இவைகளினூடே நாட்டு, சமூக,மதப்பணிகளே நம் கடனெனக் கருதி இதனை ஒருவாறு நடாத்திவந்தோம். இவ்வைந்தாண்டுகளில் நமக்கென சொந்தமான ஓர் அச்சகமில்லையே, நம் மனதில் தோன்றும் அணிகலன்களிட்டு **'நூருல் இஸ்லாம்"** இதழின் தொண்டினைப் பெருக்க இயலவில்லையே என நாம் பன்முறை ஏங்கியதுண்டு. அதுகாலை நாம் எல்லாம் நன்மைக்கே என்ற தைரிய மொழியை அடிக்கடி ஞாபகப்படுத்திக்கொண்டு **"நூருல் இஸ்லாம்"** இதழை வெளியிட்டுவந்தோம். ஆனால், இன்று அதே தைரிய மொழி நம்மை நிமிர்ந்து நிற்கச் செய்துவிட்டதென்பதை நேயர்களுக்கறிவித்துக்கொள்ளுகிறோம். நம் முஸ்லிம் லீக் நாளுக்குநாள் வளர்ச்சியடைந்து, இன்று தன் காலில் தானே ஊன்றி நின்று பணியாற்ற சக்திபெற்று விட்டிருப்பது போன்றே, இன்று நாம் ஓரளவு நம் காலில் நாமே நிற்கக்கூடிய சக்தி பெற்றிருக்கிறோம். நம்முடையதென ஓரளவு உரிமை பாராட்டக்கூடிய ஓர்அச்சகமும் இன்று நம் ஆதிக்கத்திலிருந்துவருகிறது. இம்மாத முதல் 'நூருல் இஸ்லாம்" இதழ் நம் புதிய அச்சகத்தில்தான் அச்சிடப்பட்டு வருமென்பது மகிழ்ச்சிக் குரியது. இதுகாறும் நாம் அனுபவித்த இன்னல்களனைத்தும் சோதரர்களின் ஆதரவுப் பெருக்காலும், ஆண்டவனின் பேருளாலும் நீங்க ஆரம்பித்துள்ளனவென்பதை நம் வாசக சோதரர்களுக்கு அறிவித்துக் கொள்ளுகிறோம். **எல்லாம் நன்மைக்கே!**





# பெண்களின் பாதுகாப்பு கோஷாவே

(கொழும்பு, ஜனாப் A. A. முஹம்மது ஸாஹிர்)

இலங்கை முஸ்லிம்களில் அநேகர் "நூருல் - இஸ்லாம்" என்ற இச்சஞ்சிகையை ஆதரிப்பதை அறிந்து இக்கட்டுரையை வரையத்துணிந்தேன். இதைக் கண்ணுறும் சோதரர்கள் இதில் தவறுதலைக் கண்டால் இச்சிறியேனை மன்னிக்கும்படி வேண்டுகிறேன்.

அன்பும் ஆர்வமுமிக்க முஸ்லிம் சகோதரர்காள்!

முஸ்லிம் பெண்களின் கோஷாவானது ஸ்திரீகளுக்கு அனுகூலந்தரும் ஆசாரமாகவும், கற்புக்குப் பாதுகாப்பாகவும், நல்லொழுக்கத்திற்கு அரணான கோட்டையாகவுமிருக்கின்றது. இதை உணராத சில இலங்கை முஸ்லிம்கள் மேல்நாட்டு நவீன நாகரிகச் சேற்றில் மூழ்கி பெண்களின் கோஷாவானது சிறைவாசம் போன்றதென்றும், பெண்களின் உரிமைகளைக் கெடுப்பதென்றும் பிதற்றித் திரிகின்றனர். இன்னுமிவர்கள் மதியிழந்து தங்கள் பெண்களை கோஷாவின்றி வெளியில் உழுத்துக் கெட்டலைவதுடன் நில்லாது இதரர்களையும் கெடுக்கப் பிரயத்தனப்படுகின்றனர். இவர்களின் மௌட்டீகத்தனத்தை என்னென்று சொல்வது?

கோஷா அனுஷ்டிப்பதனால் - அடையக்கூடிய நன்மைகளையும், அதை நிராகரிப்பதனால் ஏற்படக்கூடிய தீமைகளையும் சிறிது ஆராய்வோம்.

ஸ்திரீகளுக்கு சுதந்திரம், ஆண்களின் துர்பிரவேசத்தினின்றும் பாதுகாப்பு முதலியவைகளை அளிக்கவல்ல சாதனம் இஸ்லாமியக் கோஷா முறையேயாகும். இதைச் சிறைவாசமென்று கூறுவது மூடத்தனமேயாகும். சரியானபடி ஆராய்ந்து உணராது அதைப்பற்றி அபிப்பிராயங் கூறுவது சரியன்று.

மேல்நாட்டு ஐரோப்பிய ஸ்திரீகள் கோஷாவின்றி தங்கள் அழகை பிற ஆடவர்களிடம் செலுத்தி மயக்கி ஈடுபட்டுழலும் அநாகரிகத்தை நவீன நாகரிகம் என்று கூறுவது அறிவின்மையேயாகும். ஐரோப்பியர்களின் இவ்விதத் தவறான பழக்க வழக்கத்தால் ஆண் பெண்களாகிய இருசாராரும் தங்கள் மனதையடக்கி ஆள்வதற்கு முடியாமல் கெட்டலைவதை நாம் தினசரி கண்டும் கேட்டும் வருகின்றோம். இலங்கை முஸ்லிம்களில் சிலர் இவ்வித அநாகரிகத்தை நவீனநாகரிகம் என்று கூறிக்கொண்டு கோஷாவை திரஸ்கரித்துவிட்டு பெண்களை வெளியில் கெட்டலைய விடுவதைக்கண்டு வருந்தாதிருக்க முடியாது. இவ்விதம் பெண்களை வெளியேறி யலையவிடும் ஆண்கள் வெட்கம் ரோஷமற்றவர்களென்பதில் சந்தேகமில்லை. இத்தகைய மரீத்தரோஷம் படைத்த ஆண்கள் என்று தான் புத்துயிர் பெற்றெழுவார்களோ விளங்கவில்லை. நாணம், அச்சம், பயிர்ப்பு, மடம் எனும் அருங்குணங்களை இயற்கையாகவே பெற்று கோஷாவில் இருக்க விரும்பும் பெண்களைக் கெடுத்து தற்கால நவீன நாகரிகம் என்று கூறிக்கொண்டு பகிரங்கத்தில் கொண்டு வந்து கெட்டலையச் செய்பவர் யார்? மதியிழந்த ஆடவர்களே யாவர். தற்கால நிலையை சீர்தூக்கிப்பார்த்து பிற்காலத்தில் இது எவ்வாறு மாறுபாடடையுமென்பதைத் தீர்க்காலோசனை செய்யும் அறிவாளிகள் பெண்களைக் கோஷாவின்றி ஒருக்காலும் வெளியிலெடுக்க விரும்பமாட்டார்கள்.

ஐரோப்பியப் பெண்களைப் போன்று நம் முஸ்லிம் பெண்மணிகளும் கெட்டழியாமலிருப்பதற்குச் சிறந்த சாதனமாயிருப்பது இஸ்லாமியக் கோஷா முறையேயாகும். இஸ்லாமியக் கோஷா முறையானது நம் பெண்மணிகளின் உள்ளும் புறமுமாகிய இரண்டையும் சுத்தமாக்குவதுடன் பதிவிரதா சிரோன்மணிகளாகவுமாக்குகின்றது. என்னே நம் இஸ்லாமியக் கோஷா முறையின் மகத்துவம்? உண்மையான முஸ்லிம்கள் ஒருக்காலும் கோஷா முறையை எதிர்க்க முற்படவே மாட்டார்கள். ஆனால் சன்மார்க்கப் பற்றற்றவர்களும், மதப்பிரஷ்டர்களும் ஒருவேளை எதிர்ப்புப்புரியலாம். இவர்களின் மதப்பற்றற்ற கூற்றுக்களையும், தீய பிரசாரங்களையும் அடக்கி ஒதுக்கி நம் இஸ்லாமியக் கோஷா முறையை ஓங்கச்செய்ய வேண்டியது உண்மை முஸ்லிம்களின் கடமையாகும்.

நம் பெண்மணிகளைத் பிற ஆடவர்களின் காமாந்தர ஆசைக்கு ஆளாக்காமல் பாது காக்கக் கூடிய சிறந்த சாதனம் கோஷா முறையேயாகும். கோஷாவின்மையால் மேல் நாட்டு ஐரோப்பிய ஆண் பெண்களாகிய இருசாராரிடையேயும் எற்படும் அஞ்சார சீர்கேடுகளை நாம் தினமும் கண்டும் கேட்டும் வருகின்றோமல்லவா? கோஷா முறையை அனுசரிக்காமல் புறக்கணிப்பதால் முஸ்லிம் பெண்கள் முஸ்லிமல்லாதாரை மணக்க நேரிடுவதை நாம் காண்கின்றோமல்லவா? உதாரணமாக அகில இந்திய முஸ்லிம் லீகின் மாபெருந் தலைவர் முஹம்மதலி ஜின்னாஹ்வின் ஏக புதல்வி முஸ்லிமல்லாதாரை மணந்ததற்குக் காரணம் இஸ்லாமியக் கோஷா முறையைப் புறக்கணித்ததால் என்று நிரூபிக்க முடியுமல்லவா? ஆகவே, இத்தகைய கண்ணியம் வாய்ந்த கோஷா முறையைப் புறக்கணித்து விட்டு மேல்நாட்டு நவீன நாகரிகம் என்று கூறிக்கொண்டு பெண்களை வெளியில் இழுத்துத்திரி வேண்டுமென்று பிரயத்தனப்படும் ரோஷமற்ற ஆடவர்களை என்னென்று கூறுவது?

ஆடவர்களைவிடப் பெண்களே மிகச்சிறந்தவர்களாவர். ஏனெனில் இயற்கையாகவே நற்குணத்திலும், சத்தொழுக்கத்திலும், அன்பு விசுவாசத்திலும், நாணும் தன்மையிலும் ஆடவர்களைவிடப் பெண்களே பதின்மடங்கு சிறந்தவர்கள். ஆண்களைவிடப் பெண்களின் மானமே மிகத்தூய்மை வாய்ந்தது. மேலும் பெண்கள் சுயமே கற்பு குலைந்து கெட்டுப் போவது கிடையாது. பெண்களை ஏமாற்றி வஞ்சித்து கற்பையும், மானத்தையும் கெடுப்பவர்கள் துர் நடத்தையுள்ள ஆண்களேயாவர். எத்தனையோ ஆடவர்கள் வெளிக்கு உத்தமர்களாக இருந்து கொண்டு, அந்தரங்கத்தில் பிற பெண்களைக் கெடுக்கும் லோலர்களாயிருக்கின்றனர். எனவே, சாத்வீக முறையில் நம் பெண்களைப் பாதுகாத்துக்கொள்ளும் சிறந்த சாதனம் இஸ்லாமியக் கோஷா முறையேயாகும். ஆகவே, இஸ்லாம் மதப்போதனைப்படி நம் முஸ்லிம் பெண்மணிகள் கோஷாவை அனுஷ்டித்து இகபர ஜயம் பெற்றுய்வார்களாக.

இஸ்லாமியச் சகோதரர்காள்! இறுதியாக நம் "நூருல் - இஸ்லாத்தைப்பற்றி இரண்டொருவார்த்தை எழுதாமலிருக்க முடியவில்லை. இந் நெருக்கடியான சமயத்தில் இஸ்லாமியப் பிரசாரம் புரியும் பத்திரிகை இஃதொன்றேயாகும். பதினாயிரக்கணக்கான திரவியங்களைச் செலவுசெய்து பல வருடங்கள் கலாசாலைகளுக்கும் மத்ரஸாக்களுக்கும் சென்று அறிந்து கொள்ள முடியாத பல அரிய விசேஷ விஷயங்கள் பிரசுரமாகி வருவதை நேயர்கள் அறிவார்கள். ஆகவே, இதைக் கண்ணுறும் ஒவ்வொருவரும் சந்தாதாரராகச் சேர்வதுடன் தங்கள் நண்பர்களையும் சந்தாதாரர்களாகச் சேர்த்து விரைவில் "நூ. இ." வை வாரப் பதிப்பாக வெளிவர முயற்சிப்பார்களாக. வஸ்ஸலாம்.





# இராணுவின் மகள்

(விருது நகர், திரு. ந. இராமசாமி)

உலகமக்கள் அனைவருக்கும் ஒரேவிதமான உள்ளம் அமையாதது சிருஷ்டியின் மாயா விநோதம் என்றே கருதவேண்டியதிருக்கின்றது. தாம் இன்பம் கொள்ளுவதிலே தான் தனி மாண்பு உள்ளது என்று வாழ்க்கைப் போராட்டத்தில் வளம்பெற நாட்டம் வைப்போர் பலர். தாம் துன்புற்றாலும் பிறர் இன்பம் அடையச்செய்வதே பிறவியின் இரகசியம் என்ற பெருமித நோக்குடன் தியாகசீலத்தைப்போற்றுகின்றவர்கள் சிலர். இந்த சோதனையில் தங்கள் உயிரை திரணமாக மதித்து சேவா உள்ளம் கொள்ளுகின்றவர்களை உலகம் என்றும் மறப்பதில்லை. ரஜபுத்திரஸ்தானம் இதற்கு நல்ல முப்போக விளைச்சல் பூமியாக விளங்கிவந்தது. வீரத்திற்கும்சரி, பிறர் நலம் பேணும் சீலத்திற்கும் சரி, தங்களை பரித்தியாகம் செய்துள்ள பூமணிகள் பலரை அது தந்துள்ளது. இதற்கு முந்திய கால ஏடுகள் சிறந்த ஆதாரம்.

### புகழைப் பெற புண்ணிய உள்ளம்:

வனப்புமிக்க வசந்த காலம். சூரியனுக்கு ஜோலி முடிந்துவிட்டது. துயில் பயிலும் நீல வானில் ரோஜா நிறமானமேகத்தின் மென் துயில்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாய் பாவிக்கிடக்கின்றன. பட்டுப்படுதாக்கள் காற்றில் அலைவதுபோல் தாழையும் நாணலும் சலசலத்துக் கொண்டிருந்தன. ஆரவல்லி மலைத்தொடரில் பொன்னிற கதிர் திரொளிக்கின்றது. கீழ்வான எழிற்சுழலில் ஒரே பிரகாசம். சலசல ஓசை எழும்பும் கலசமரங்களின் இலைகளின் இடுக்கில் அதோ! அதோ!! வெண்மதி. தண்குண சுகுண மங்கை கிளம்பிவிட்டாள். இங்கிதமிகும் இந்த சந்திரிகையின் பிரகாசம், மயக்கு, லளிதம், ஆகியவைகளில் எல்லாம் சம்பாவதியின் மனம் செல்லவில்லை. ஆரவல்லி மலையைப்பிளந்து பள்ளத்தை நாடி ஓடி சென்ற ஓடையில் சிறுசிறு கற்களை வீசி எறிந்து அவள் தம்பி சுந்தரசிங் விளையாடிக் கொண்டிருந்தான். பன்முறை அக்பரால் அடியடிக்கப்பட்ட இராணுபிரதாப்சிங் பெற்ற மக்களில் ரத்னம் போன்றவள் சம்பாவதி. வயது பதிமூன்றுதான். தம்பி சுந்தரனுக்கு ஆறு பிராயம் நடந்து கொண்டிருக்கின்றது. அரண்மனையில் தாங்கள் அனுபவித்த ஆனந்த வாழ்வையும் இன்று மனித அரவம் அற்ற அந்த ஆரண்யத்தில் தாங்கள் பெறும் அவதியையும் மாறிமாறி நினைத்து அங்கம் பதறினாலும் அவள் உள்ளத்தில் வீர தெம்பு இம்மியும் கலங்காது இருந்தது. மெல்லிய உடல் கொண்ட சம்பாவதிக்கு அதிகமான சதை கிடையாது. ஆனால் அவளுடைய வச்சிர உள்ளம் அவ்வப்பொழுதெல்லாம் அங்கங்களுக்கு வன்மை அளிக்கும் சஞ்சீவி மலையின் வற்றாத சுனையாக மிளிர்ந்தது. அவளுடைய கூரிய கண்கள் கரியநீரில் செந்தாமரை பூத்தது போல. எதையும் அமைதியுடனும் நிதானத்துடனும் தான் பேசுவாள். படபடப்பு அவளிடம் நெருங்க பதட்டம் கொள்ளும். புகழைப்பெற புனித உள்ளம் பெறவேண்டும் என்பதே அவளுடைய சர்வ சதா துடிதுடிப்பு.

### தம்பிக்குச் சொன்ன கதை:

இழந்த பட்டத்தைப்பெற இராணு தனது மனைவி மக்களுடன் ஆரவல்லி மலைச்சாரலில் கூடாரம் அமைத்து சிதறிக்கிடந்த ரஜபுத்திரவீரர்களை சேகரித்து ஒருங்கு அமைக்க முடியுமா என்று யோசித்துக்கொண்டிருந்த காலம் அது. கையில் இருந்த பொருள் எல்லாம் கரைந்து அன்றாடம் காலம் தள்ளுவதற்கு கூட கர்ணம் போட நேர்ந்து விட்டது.

விளையாட்டு மோகத்திலிருந்தாலும் சுந்தரசிங் பசிக்கொடுமையால் பதை பதைக்க ஆரம்பித்துவிட்டான். அவனுடைய புலம்பல் சம்பாவதிக்கு பெரிய நச்சரிப்பாக இருந்தது. அவனுடைய பசி உணர்ச்சியை மாற்ற அவனுக்கு இப்படி கதைசொன்னாள்: "ரொம்பகாலத்திற்கு முந்தி இந்த நாட்டை ஆண்டுவந்தசக்காவர்த்தி எதிரிகளால் தோற்கடிக்கப்பட்டுவிட்டார். உயிரில் அவருக்கு ஒரே ஆசையில்லையென்றாலும் எதிரியை பழிக்குப்பழி வாங்க தயார்கொள்ள ஆரண்

யித்தில் சுற்றித்திரிந்தார். காட்டில் அவருக்கு பசி வந்துவிட்டதாம். அவரிடம் இருந்தது எல்லாம் ஒரே ஒரு ரொட்டித் துண்டுதான். எடுத்துப்புசிக்கப்போனர். அந்த சமயம் காகமொன்று பறந்துவந்து வெடுக்கென்று பிடுங்கிச்சென்றது.'' கவனித்து "உம்'' கொடுத்துவந்த சுந்தரசிங் கேட்டான்: "ஆமாம் அக்கா, அரசர் அழுதாரா என்ன?'' என்று.

"அவர் உன்னைப்போல் ஒரு அசட்டுப் பிள்ளை அல்ல. பசிபசி என்று பறக்கிறயே நீ. சிறிய ரொட்டிக்கு அவர் அழவில்லை.'' உயர்ந்த குரலில் சம்பாவதி கூறினள். சுந்தரசிங் "அட'' "அட'' சொன்னன் "அக்கா அப்படியானல் நான் என்ன அசட்டுப்பிள்ளையா? ரஜபுத்திரவீரன் என்பது நினைவிலிருக்கட்டும். நான் இப்பொழுது திட்டமாய்ச்சொல்லுகிறேன்; எனக்கு பசி இல்லை.'' நதியுடன் அவன் விளையாட்டு ஆரம்பம். சம்பாவதிக்கு தங்களுக்கு நற்காலம்தா நாதன் அருள் பாலிப்பு தருவானென்று ஏக்கம். ரொம்ப பொழுதுபோய் விட்டது. கூடாரம் போவோமென்று இருவரும் புறப்பட்டனர்.

### சோதனைக்குவந்த அகதி:

இராப்பட்டினி நிலைமையில் ராஜபோகத்தில் கூடாரம் அமைக்க இராண எங்கு போவான். வேட்டைக்காரன் கூடாரம் போல்தான். எண்ணெய் இருந்தும் எக்காளத்துடன் எரிய அங்கிருந்த விளக்கிற்கு மனம் இல்லைபோலும். ஏதோ பெயருக்கு எரிந்துகொண்டிருந்தது. ஆழ்ந்த சிந்தனையிலிருந்த இராணவிற்கு மனோ ம்யத்துடன் ப்ால்போல் காய்ந்த நிலாவின் காந்த சக்தி க்ண்ணில்படவில்லை. சுகமே வாழ்ந்து இன்இசை இசைத்து திரிந்த பட்சி ஜாலங்களின் பண்கள் அவன் காதில் விழவில்லை. தனது அபிலாஷைகளுக்கெல்லாம் முழுமுழுக்க திரைவிழுந்துவிட்டதாகவே கருதினன். அவன் மனதில் சொல்லவொண்ணத உணர்ச்சிகள் கொந்தளித்தன; ஏதோ கைக்குக்கிடைக்காத ஒன்றைக்குறித்து உலகரட்சகனைக்கெஞ்சிக்கேட்கவேண்டும் என்று அவனுக்குத் தோன்றிற்று. யாரையாவது ஏன் இந்த உலகத்தையே சபித்து அழியச் செய்துவிட்டால் ரொம்ப ரொம்ப தேவலையென்றிருந்தது. வாய்விட்டு அலறி அழுதால் அமைதி வருமா என்று ஆசித்தான். அல்பச்சொல்ப விஷயங்கள்கூட அப்பொழுது ஏதோ ஒரு மாயத்தால் பேய்ருபம் கொண்டுவிட்டதாய்க் கருதினன். சோகத்துடன் விட்ட பெருமூச்சுடன் தொடர்ந்து அவன் சொன்னன்: "எனது அன்பின் அரசி குணவதி! நமது விதியின் விளைவை என்னவென்பது. நாட்டையும்நல்வாழ்வையும் இழந்து வாழ்விற்கே போராடும் நம்முடைய இன்றைய நிலைமையில் சோதனைக்குத்தான் இந்த அகதி வந்தார்போலும்.''

மாலைக் கடன்களை முடித்துவிட்டு வருவதாகப் போன அவர் இப்பொழுதோ இன்னும் சற்றுநேரத்திலோ வந்துவிடுவார். அவருக்கு நாம் எதை அளித்து உபசரிப்பது? ரஜபுத்திர ஸ்தானத்தின் சர்தார்களாகவும், க்ஷத்திரிய வம்சத்தின் திலகமாகவும் இதுகாறும் விளங்கிவந்த சித்தூர் அரச பரம்பரையைச் சேர்ந்த நான் இந்த வறுமையின் கொடுமையால் என்னைத் தேடிவந்த அகதியை வெறும் கையுடன் அனுப்பினல் அவமானத்தைத் தரக்கூடிய அபவாதம் ரஜபுத்திர பரம்பரையை களங்கமாக்கி விடுமே. "இது சகிக்கத்தக்கதல்லவே''.

"எனது பிரிய நாதரே! நீங்கள் படும் துயரம் என்னை நடுங்கச் செய்கிறது. விதியின் விளையாட்டில் நாம் சேர்ந்துவிடவேண்டுமேஅல்லாது எதிர்கொள்ள நமக்கு திறன் உண்டா? கவலைக்கு பிரதான்யம் கொடுத்து கலங்குவது வீரகவசம் அணிந்த கண்ணியம் மிக்க சீலர்களுக்கு சிறப்பு அல்லவே. கடவுள் நம்மீது தக்க காலத்தே கருணை காட்டுவார். இதுவே இன்று நாம் பூஜிக்கவேண்டிய நம்பகம்.'' குணவதி கூறிய தேறுதல் இது.

"வாழ்க்கை சுக போகங்களுடன் வாழ்வதற்காகமட்டும் அல்ல என்ற தத்துவ நுட்பத்தை உணர்ந்த குண களஞ்சியமே. உனது வார்த்தையின் ஜீவ சக்தி எனக்குத் தெளிவு காட்டுகிறது. பெரிய பெரிய இடையூறுகளையும் துன்பங்களையும் சகித்தவனக இருந்த போதிலும் தற்சமயம் ஏற்பட்டுள்ள சிக்கல் என்னை தலைகுனிய அடிக்கிறது. நிமிர நான் எங்கு சக்திபெறுவேன்? இந்தக்கூடாரத்தில் உன்னையும் என்னையும் அதோ சிதறிக்கிடக்கிற அந்த சிறப்பு இழந்த ஒடச்சல் பாத்திரங்கள் அல்லாது வேறு என்ன இருக்கிறது நமது உடமை என்று கொண்டாட? நமது அருந்தவப்புதல்வன் அக்ஷயகுமாரனும் பிரேமை புத்திரி சுவர்ண குமாரியும் இதே பசிக் கொடுமையால் பதைபதைத்து பரமண்டலம் பார்த்த காலையிலும் வீரத்திற்குத் தியாகம் என்று வீராப்புடன் இருந்தேன். அந்த வீரம் செறிந்த உணர்வு எல்லாம் இன்று எங்கோ ஒளித்துக்கொண்டு விட்டதுபோல் இருக்கிறதே. வருகிற அகதியை வரவேற்க எனக்கு வாய்வருமா?'' என்று கூறி கேள்வி ஒன்றைப்போட்ட மன்னரைத் தொடர்ந்து, சகோதரருடன் கூடாரத்தில் நுழைந்த சம்பாவதி திடமனதுடன் கணீர் என தொனிக்க செப்பினள்: "உறுதியாகச் சொல்லுகிறேன் அப்பா. வந்த அகதி நம் வீட்டைவிட்டு பசியுடன் செல்லக்கூடாது. ரஜபுத்திரர்கள் போற்றி பூஜிக்கும் தனி பெரும் தருமம் அல்லவா?''

பிரதாபசிங் சம்பாவதியை நோக்கினர். "குழந்தாய்! பேசிவிடலாம். செயல் புரிய சக்தியில்லையே. வார்த்தை வரவேற்புடன் செல்லுகிற அகதி என்றால் மாலைக்கடன்களை முடித்துவிட்டு திரும்புகிறேன் என்று சொல்லிச் செல்வாரா'' என்று ஏங்கினர்.

### தியாகத்தின் சிங்கார முகடு!

தந்தைக்கு பதில் சொல்லவில்லை. அதிக ஆலோசனைக்கு இடம் கொடுக்கவில்லை. தியாகத்தின் சிங்காரமிக்க உச்சி முகட்டை எட்டிப்பிடிக்கத் துடிதுடிப்பு. கூடாரத்தை விட்டுச் சென்று சிறிதே போதில் திரும்பினள். இரண்டு ரொட்டிகளை அப்பனிடம் அளித்து கூறுகின்றாள். "பெற்றுவளர்த்த பிதாவே! நேற்று முன்னள் எனக்குத் தாங்கள் கொடுத்த இந்த ரொட்டிகளை பசியில்லாமையால் வைத்திருந்தேன். இவைகள் நல்வழியில் நயமென உபயோகப் படப்போவது நமது பாக்கியமே.''

உண்மையில் இது பெரிய பொய். பூசனியை சோற்றில் மறைப்பதுபோல் தனது தம்பி சுந்தரனுக்குப் பசி வந்தபோது கொடுக்கத் தான் பட்டினி கிடந்து அவைகளை பத்திரம் செய்திருந்தாள். இப்போது ஆற்றங்கரையில் பசி பசியென்று கரையாய்க் கரைந்த தம்பிக்குக் கொடுக்கலாம் என்றே கூடாரம் கூட்டிவந்தாள். விதியின் கோரம் வேறு திக்கில் திரும்பிவிட்டது.

இப்பொழுது இராணசிங் கொண்ட உற்சாகம் சொல்லிமுடியாது. எழுந்த அவசரம் சம்பாவதியை திடுக்கடித்தது. "பிரிய மகளே நானும் அம்மையும் அடுத்துள்ள தோப்பில் சில கனிகளைப் பறித்துவருகிறோம்.'' ரொட்டிகளுடன் அவைகளும் சேர்ந்து சார்ந்து வரும் அகதிக்கு சோபிதம் அளிக்கும். வருக கூறி அன்பைபேணி அடக்கத்துடன் நட'' எனக் கூறி வெளிப்போந்தார் குணவதியும் சுந்தரனும் பின்தொடர.





சொல்லி வைத்தாற்போல் இராணவும் ராணியும் சென்றதுதான் தாமதம் தாடிமுடி தரித்தவராய் வந்தார். சம்பாவதி சமர்த்தாய் வரவேற்றாள். "தோத்திரம் புனிதரே எனது தந்தையும் தாயும் இப்பொழுது வந்துவிடுவார்கள். இப்படி ஆசனம் கொள்ளுங்கள். உங்கள்பணிவிடையை பாக்கியம் எனக் கருதும் இராணவின்மகள் நான்; சம்பாவதி. தாங்கள் அதிகம் பசிகொண்டுள்ளீர்கள்'' என்று முகமன் கூறி ரொட்டித் துண்டுகளை படைத்தாள். உண்ண பிரார்த்தித்தாள். சிறுமியை உற்றுநோக்கிய பண்டாரத்தின் முகத்தில் பரிதாபத்தையும் அதிகப் பிரியத்தையும் காட்டக்கூடிய ரேகைகள் படர்ந்து படர்ந்து மாறின. உண்டார் ஒப்புக்காக. உவகையுடனு? சம்பாவதியின் அடக்கத்திற்கும் அன்பின் கசிவிற்கும் ஆசி கூறினர். உண்ட மயக்கம் தொண்டருக்கும் உண்டு என்று வந்த அதிதி அந்த கிழிந்தபாயில் அப்படி சிறிது சாய்ந்தார். உண்ணத மயக்கம் உலகினருக்கு பொது என்று சம்பாவதியின் உயிரைக் குடித்துக்கொண்டிருந்தது. உணர்வு இழந்தாள். தரையில் சாய்ந்து விழுந்தாள். இந்த விபாம் எப்படி அந்த அகதிக்கு தெரியாதோ அதுபோல் படுத்திருந்த அகதி திடுக்கென்று எழுந்து வெளிப்போந்த விபரமும் சம்பாவதிக்கும் தெரியாது.

### "டிடிஜி'' தூங்கினளா?

இந்த சமயம் இராணவும் அவர்தம் பத்தினியும் பறித்த சில பழங்களுடன் கூடாரம் வந்தனர். மகள் மூர்ச்சித்துக் கிடப்பதை பெற்றோர்கள் பார்த்துவிட்டனர். துடிதுடித்தனர். சுந்தரசிங் கேட்டான் "அம்மா! "டிடிஜி'' ஏன் இதுபோல கிடக்கிறது'' என்று. இராணி குணவதி வழிந்தோடிய கண்ணீரைத் துடைத்துக்கொண்டே கூறினள். "குழந்தாய் உனது அருமை "டிடிஜி'' தூங்குகிறது. போ அம்மா, 'டிடிஜி' இதற்குள் இப்படி தூங்கமாட்டாள்'' என்று அவன் அழுத அழுகை அந்த ஆரண்ணியம் முழுக்க சோக திரையை விரித்துவிட்டது

### துன்பம் தொலைய வழி.

இராணவுக்கு இருக்கை கொள்ளவில்லை அவர் மனம் எப்படி எப்படியோ வேலைசெய்தது. சித்தம் முழுக்க சிதறிவிட்டது. பெரிய முடிவைக் கண்டவர்போல் சொன்னர்: "சித்தூரின் திலகமே, நாம் அவருடைய ஆதிபத்தை அங்கீகரித்தால் சமாதானம் அடையக்கூடும். அவருக்கு நம்முடைய

கஷ்டங்கள் யாவும் தெரிந்துபோய்விட்டன. அவற்றைக்கேட்டு அவர் மிகவும் வருந்துவதாகச் சொல்லுகிறார்கள். நம்முடைய குழந்தைகளுக்காக நம்மை ஆதரிக்க விரும்புகின்றாராம். நாம் அவரை ஒப்புக்குமாத்திரம் சக்கரவர்த்தியென அங்கீகரித்தால் நாம் சுயேச்சையை அனுபவிக்கலாம். நமது துன்பம் துடைக்கப்பட்டு சித்தூர் சீர்பெறும்." யாரோ நடந்துவந்த அரவம் கேட்டது. 'யாரது? என்று மன்னர் அதட்டினார். பதில் இல்லை. "அது இலைகளின் சலனக்கோளாறு" இப்படி குணவதி கூறினாள்.

### தந்தைக்கு மகள் தந்த வீர உபதேசம்.

பசி மயக்கத்தில் போராடிக்கொண்டிருந்த சம்பாவதி இராணாவின் பேச்சைக் கேட்டுவிட்டாள் போலும். ஆவேசங்கொண்டவள் போல் கண்விழித்தாள். தீனக் குரல்தான். உறுதி அதில் சிறந்து விளங்கியது. "பிரியம் நிறைந்த பிதாவே! ரஜபுத்திர திலக தந்தையே! நீங்கள் இன்று அக்பருடைய உதார குணத்தைக் கண்டுபிடித்து விட்டீர்கள். நாளையதினம் அவரிடம் ஒரு உயர் நீத உத்தியோகம் பெறுவீர்கள். மறுநாள் அவருடைய அடிமையாய் விளங்குவதில் தனி கர்வம் கொள்ளுவீர்கள். ஆனால் அதே சமயத்தில் தாங்கள் ரஜபுத்திரர்களின் சுதந்திரத்தை வேரோடு வெட்டிவிடுவீர்கள். அவ்வளவுதான். அவர் உங்கள் பிள்ளைகளிடம் பேரன்பு கொண்டிருக்கின்றனர். ஆனால் உங்களுடைய குழந்தைகள் உங்களைப்போல் அவ்வளவு கேவலம் நெஞ்சம் படைத்தவர்கள் இல்லை. அந்தச் சக்கரவர்த்தி ஆல்டிக்கார்ட் யுத்தத்தை மறந்துவிட்டார்போலும். உண்மை ரஜபுத்திர இரத்தம் ஓடுகின்ற ஒருவன் உயிர்கொண்டு இருக்கும் வரையிலும் அக்பரின் ஆதிபத்தை ஒப்புக்கொள்ளுவது கனவில் நடக்கும் காரியமாக இருக்கலாம். ஏன் அப்பா உங்களுக்கு இப்படி தொடை நடுக்கம். உங்களுக்குள்ள கஷ்டங்கள் ஆபத்துக்களைக் கூறுகின்றீர்கள். கஷ்டம் என்பது மனிதனுடைய உயிர் வலிமையை சோதிக்க வருவதாகும். உயிருக்கும் கஷ்டத்திற்கும் போராட்டம் நடைபெறும் காலையில் அமைதியுடன் இருந்தால் அன்றி உயிர் கஷ்டத்தின்மீது வெற்றி காணாது. அமைதி போய்விட்டால் அடிமையாக வேண்டியதுதான். தனி மனிதன் சுகத்தை நினைத்து நாட்டின் நற்பெயரைக் கெடுக்கவேண்டாம் அப்பா. வீரனுக்குத்தான் வாழ்வு உண்டு. சூரன் ஒருவனே சுகத்தை அனுபவிக்க முடியும். பலயீனன் என்றும் பிறர் பின் தாளம் போடவேண்டியதுதான். அவனை சுகம் எனும்பேய் ஆட்டி அடித்துவிடுகிறது. தியாகத்திற்குத் திரைபோட்டால் கோழை என முடி சூட்டிக் கொள்ளவேண்டியதுதான். பாவி பயங்கொள்ளி என்ற பெயர் நம்மை காதவழியில்கூட சந்திக்க விடக்கூடாது. ரஜபுத்திர வீரத்திற்கு இழிவுதேடும் நாடகம் வேண்டாம் அய்யாவே. நான்நினைக்கிறேன்; உங்கள் வீரத்தையெல்லாம் ஆரவல்லி மலை என்ன அரித்து தின்றுவிட்டது?"

இராணாவிற்கு எப்படியோ இருந்தது. ஜீவன் வேலை செய்தது. வீரம் செறிந்த குரலில் கூறுகின்றார். "வீர உரை தந்த ரஜபுத்திர மகுடமுடியே! எனதுஉயிர் உள்ள மட்டும் சித்தூரைமீட்கவே போர் புரிவேன். பவானியின் சத்தியம். எனக்கு என்னுடைய பிள்ளைகள் மீதுள்ள பட்சமே எனது வீரத்தை ஒளியும்படி செய்தது. உனது வீர மொழிகள் எனக்கு உணர்வு ஊட்டியது. நான் அக்பருக்கு இடம் கொடேன்."

"இதுவே எனக்கு சாந்தி தருகிறது அப்பா" என்ற சம்பாவதியின் பேச்சைத்தொடர்ந்து "ஆம் அது உண்மையே வீரமகளுக்கு சாந்தி வேறு எங்கு உண்டு" என்று புதிய கூடாரத்தின் வாயிலிருந்து வந்தது. யாவரும் நோக்கினர். பண்டாரம் பிரசன்னமானார். "இவர்தான் அப்பா சிறிது நேரத்திற்கு முன்பு வந்து நமது எளிய குடிசையில் அமுதம்பெற்ற அகதி" என்றாள் சம்பாவதி. மாறுவேஷத்தை மாற்றியபடியே அக்பர் சக்கரவர்த்தி சொன்னார் "ரஜபுத்திர சிம்மமான இராணா உம்முடைய வீரமும் உம்முடைய குழந்தைகளின் தைரியமும் சுதந்திர தாகமும் என்னை மயக்கிவிட்டன. நீர் ஆசீர்வதிக்கப்படுவீர். இந்திய தாய் சம்பாவதி போன்ற வம்சத்தால் மகத்தான கௌரவம் அடைகின்றாள். தேசபக்திக்கு திலக மணிகள். நான் இனி உம்முடைய சுதந்திரத்திற்கு இரட்சகனாய் இருப்பேன். உம்முடைய வீரம் செறிந்த கையைக் கொடும்."

திக்பிரேமையுடன் சம்பாவதி திரு திரு விழித்தாள். ஆண்டி வேடத்தில் அகதியாய் வந்தவர் அக்பர் என்றாள். "ஆமாம் மகனே. நமது வீரத்தை உண்மை வீரரான மன்னர் போற்றி கை வேண்டுகிறார்" என்று மகளை நோக்கி இராணா மன்றாடுவதுபோல் இருந்தது. புன்முறுவல் பூத்த முகத்துடன் சம்பாவதி தலையை அசைத்து தோத்திரம் செய்

(116-ஆம் பக்கம் பார்க்க)

# திரு குர்ஆனின் அபார சக்தி



(கீரனூர், ஜனாப் ஸதக்கத்துல்லாஹ்.)

சோதரீர், இப்பூவுலகின் கண் கணக்கற்ற நபிமார்கள் தோன்றி தத்தம் காலங்களிலுண்டான மானிடர்கள் முன் பேராச்சரியப்படத்தக்க அதியற்புதக் காரணங்களையும் முஅஜிஸாக்களையும் காட்டிச் சென்றனர் ஹஜ்ரத் நூஹ் (அலை) அவர்களின் துஆவானது உலகத்தை தண்ணீரில் மூழ்கடிக்கச்செய்தது ஹஜரத் ஷுஐப் (அலை) இவர்களின் துஆவானது பெரும் பெரும் மலைகளின் மார்பின்பால் நெருப்பு மழை பெய்து மக்களை ஹலாக்செய்தது. ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்களின் முஅஜிஸாவானது பிர்ஔனை நிலாற்றில் மூழ்கச்செய்தது. இவர்களின் கைத்தடியாகிறது அதே நீலாற்றை இரு துண்டாகப் பிரிக்கச்செய்தன பாறைகளின் மார்பின்பால் தண்ணீரைச் சுரக்கச்செய்தது ஹஜ்ரத் ஈஸா(அலை) அவர்களின் உமிழ் காற்றானது பிறவிக் குருடனுக்குப் பார்வையையும் குஷ்டரோகிகளுக்கு சுவாத்தியத்தையும் மரணத்தின் விரிப்பின் மீது படுத்துத்துயிலும் பிணங்களுக்கு உயிரையும் கொடுக்கச் செய்தது. இன்னும் எத்தனையோ எண்ணிலடங்காத அதிக ஆச்சரியப்படத்தக்க அதிசயங்களெல்லாம் இவ்வவனியின் கண் தோன்றி மின்னல்போன்றிலங்கி மறைந்துவிட்டன. இவைகளெல்லாம். மேல் வரைந்த நபிமார்களின் முஅஜிஸாக்களாகும். ஆனால் இவ்வுலகத்தில் ஒரு நபி அவதரித்தார் அவர் பெயர் முஹம்மதாகும் அவரின் அற்புதமாகிறது மக்களை ஹலாக் ஆக்குவதற்குப் பதிலாய் நல்ல ஜீவிய வாழ்க்கையைக் கற்றுக்கொடுத்தும் - கற்களே போன்று இறுகிக்கிடக்கும் கல்புகளை மெழுகு போல் உருகச்செய்தும். விரோதிகளாய், கடும்பகைவர்களாய், இருப்பவர்களை உத்தமத் தோழர்களாகச் செய்தும் அறிவு, புத்தி, என்னும் கண்களில்லாத குருடர்களுக்கு. நேர்வழி யென்னும் பார்வையைக் காண்பிக்கச்செய்தும், நலம், கெடுதி, இன்னதென்றே உணராது தத்தம் மனம்போனபோக்கில் கண்டதே காட்சி கொண்டதே கோலம் என அந்தகார காரிருளில் மூழ்கிக்கிடந்து - ஆழ்ந்தலைந்து - உழன்றவர்களை யெல்லாம் நேர்வழி யென்னும் சீரான பாதையில் நடக்கச் செய்தும்- மதுபானம், விபசாரம, சூதாட்டம். திருட்டு முதலிய கெட்ட காரியங்களே உருவாயமைந்து அதிலேயே துயின்று கிடந்தவர்களை யெல்லாம், தூய்மையான மாந்தர்களாய் ஆக்கியும். குப்ரு - ஷிர்க். முதலிய காரியங்களைச் செய்யவிடாது தடுத்து ஏக தெய்வதத்துவத்தைக் கடைபிடிக்கச் செய்தும் மூர்க்கம் பெருமை ஆடம்பரம் அகம்பாவம் ஆகியவைகளைவிட்டு விலக்கி தாழ்மை பணிவு மரியாதை அன்பு - பிரீதி முதலிய நற் குணங்களைக் கொடுக்கவும் செய்து விட்டன.

சோதரீர்! இந்த அபார வேலையை எந்த வஸ்து செய்ததென நினைக்கிறீர்கள்? ஆம் அதுவே நமது பரிசுத்த குர் ஆன்ஷரீப் ஆகும். இந்த குர் ஆன் ஷரீபேதான் நமது நாயகம் (ஸல்) அவர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள முஅஜிஸாக்களில் பெரும் முஅஜிஸாவாகும. இந்த குர் ஆனின் அபார வேலை மின்னலே போன்று மினுக்கி மறைந்துபோகக் கூடியதாக வில்லாது-சதாகாலம் உள்ளதாக இருந்தும் ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்களின் அற்புதங்களைக் கண்ணுற்ற விஞ்ஞான சாஸ்திரிகள் சந்தேகங்கொள்வதே போன்றில்லாது எந்த மனிதனும் ஏற்றுக்கொள்ளும்படியானதாக இருந்தும், சொற்ப நேரத்தில் உதித்து மறு சந்தர்ப்பத்தில் அழிந்து போகக்கூடியதாக யில்லாது காலாகாலம் நேமமாக இருந்தும் இவ்வுலகமும் இவ்வுலகத்தையுடையோரும் யாதொரு தட்டுத் தடங்கலின்றி ஒப்புக்கொள்ளக் கூடியதாகவும் இருக்கிறது. என்னே நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மாண்புமிக்க முஅஜிஸா - மேலும் இந்த குர்ஆன்ஷரீப் "நான் கியாமநாள் வரை உள்ளதாக இருந்தும் நபிகள் நாயகம (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் என்றும் இவர்களின் நபித்துவம் மகா உண்மையானதென்றும், இவர்களே கடைசி நபி யென்

றும், இவர்களுக்குப்பின் யாதொரு புதிய நபியும் வேதமுடையவரும் அறவே வரவே மாட்டார்கள் என்றும் மெய்சாட்சி கூறு கிறேன்" என்று கூறுகின்றன. இன்னும் "என்போல் ஒரு வேதத்தை இல்லை - ஒரு சிறு ஆயத்தையேனும் - இவ்வுலகிலுள்ள ஜின்னுவர்க்கமும் மனுடவர்க்கமும் சேர்ந்து கொண்டுவர முயன்ருல் அவர்களால் அறவே முடியாதென்பது திண்ணம்." என்று அறை கூவுகின்றன. இந்த ஓர் பெரும் எச்சரிக்கை அறைகூவல் ஏற்பட்டு இன்றைக்கு 14 - நூற்ருண்டுகளாகப் போகின்றன. இன்றுவரையிலும் இவ்வுலகிலிருந்து யாதொரு ஜவாபும் பதிலுமில்லாமல் வாய்மூடி நிற்கின்றன - என்னே, நமது திரு குர் ஆணின் அபாரசக்தி.

சோதரீர்! ஒரு காலம் முன்பு இருந்தது. அக்காலத்தில் கொள்ளை களவு திருட்டு பொய் வஞ்சகம் நிறைந்து ஒரே அந்தகார காரிருளில் மூழ்கிக்கிடந்தது யாதொரு குற்றமுமறியாத பெண்குழந்தைகள் அல்லல் படலானார்கள். தொட்டியில் படுத்துறங்கும் சிறு குழவிகள் உயிருடன் மண்ணில் புதைக்கப்பட்டனர். கிணற்றில் தள்ளப்பட்டார்கள். பெண்குழந்தைகள் நிறுத்தப்பட்டு அம்பால் எய்து கொல்லப் பட்டார்கள். ஆடுமாடுகள் பூமிகள் இவைகளைப் பங்கு போடுவதே போன்று அக்காலப் பெண்மணிகள், ஆண்களால் பங்கு போடப் பட்டார்கள் - கர்ப்ப ஸ்திரீகள் தங்கள் வயிற்றை கிழிக்கப்பட்டார்கள். பல மில்லாதவர்கள் பலமுள்ளவர்களால் பலவந்தமாக பிடிபட்டு அடிமையாக்கப் பட்டார்கள் மிருகங்களைப்போல் விற்பனைக்காளானார்கள். பணமில்லா மக்கள் பணமுள்ளவர்களால் கஷ்டப்படுத்தப்பட்டார்கள் பணமும் பலமும் உள்ளவர்கள் தங்களிஷ்டம்போல் துற்காரியங்களளவில் பிரவேசிக்கலானார்கள். பெண்களின் கர்ப்பத்தை யார் அதிகமாக கற்பழித்தார்களோ. அன்னவர்களே அதிகம் கௌரவிக்கப்பட்டு வந்தனர்கள். கொள்ளை களவு வழிப்பறி இவைகளில் யார் திறமை வாய்ந்திருக்கிறார்களோ அவர்களே பதிக்கப்பட்டு வந்தனர்கள் - விக்ரஹங்களின் முன் நிர்வாணமாக வலஞ் சுற்றலானார்கள் - பகைவர்கள் தங்களின் கை கால் அறுக்கப்பட்டு சுடுமணலில் துடிதுடித்து இறக்கப்பட்டார்கள். இவர்களின் ஈரக்கொலைகள் கொய்து மெல்லப்பட்டன. என்னே, அக்காலத்தின் அறியாமை! அந்தோ பரிதாபம்!! சோதரீர், இந்த ஓர் கொடிய காலத்தில் தான் நமது பரிசுத்த குர் ஆன் ஷரீபு இறங்கினது 13 - வருடமாக மலைகளிலிருந்தும் பொதும்புகளிலிருந்தும் மனிதர்களுக்கு தன் ஒளியைப் பிரகாசிக்கச்செய்து. சுத்த சத்திய சத்தத்தை கொடுத்துக் கொண்டே இருந்தது. இந்த நீண்டகால அழைப்பிற்கு என்ன பதில் நிகழ்ந்ததென நினைக்கிறீர்கள்? சண்டை, யுத்தம், போர் இவைகளின் மேகம் நாலுபாகத்திலும் சூழ்ந்துகொண்டிருந்தன. கல், மண், ஈட்டி, அம்பு வாள், கத்தி, முதலியவைகளால் மழை பெய்து கொண்டிருந்தன. ஆனால் எப்பொழுது 14 - வது வருடச் சந்திரன் உதயமாக ஆரம்பித்தனவோ, அன்றைத்தினத்திலிருந்து. அரப்தேயத்தின் ஒவ்வொரு மூலை முடுக்குகளில் நீண்டும் இந்த திருகுர் ஆனின் ஒளிவு ஒலிக்க வாரம்பித்தன. மக்கள் ஒவ்வொருவர்களும், இக் குர் ஆனைப் பின் பற்றலானார்கள். இதன் உண்மையான தத்துவத்தை. உணர்ந்தார்கள். இதற்குப்பின் அவர்கள் எங்நிலைமையை அடைந்தார்கள். என்பவைகளைக் கவனியுங்கள் — அறிவில்லா மாக்கள் அதிக-விரக்கமுள்ளமக்காளாக மாறினார்கள். கொள்ளை. களவு, முதலிய தீய தன்மைகளுள்ளவர்கள். உலகம் போற்றும் உத்தம சீலர்களாக. உதிக்கலானார்கள். இருளுக்குப்பகரம் ஒளியும் அறியாமைக்குப் பகரம், கல்வியும், குப்ரு-ஷிர்க்கு இவைகளுக்குப் பகரம், ஏக தெய்வத்துவமும உடையவர்களானார்கள். பல ஹீனர்கள் சக்தியற்றவர்கள். பலம் வாய்ந்த மாந்தர்களாகவும் மிகைக்க கூடியவர்களாகவும், மிளிர்ந்தார்கள், மூர்க்கர்கள், வம்பர்கள், கொலைபாதகர்கள், உலகம்போற்றும் நீதிவானுகவும் பெரிய பெரிய அரசர்களாகவும் கிரீடாதிபதிகளாகவும் கிளம்பினார்கள். என்னே. திரு குர் ஆணின் அபார சக்தி.

அரப், அஜம், துருக் தைலம், ஹபஷ ஹிந்த் முதலிய தேசங்கள் முன்பு எந்நிலையையுடையதாக இருந்தன? அரபிகளின் கொள்கை எவ்வண்ண மிருந்தன? வஹ்ஷிகளின் தன்மை எவ்வாறிருந்தன? பர்பர் கபீலாவின் காட்டுமிராண்டித்தனம், எந்நனமிருந்தது? இவர்களின் கதையை யார் அறியாமலிருந்தனர்? துருக். தாதார், இவைகளின் மிருகத்தன்மை எத்தகையதாக இருந்தது? என்பவைகளை சரித்திரக்கிரகங்களின் மூலம் எடுத்துப் புரட்டிப் பார்ப்போமானால் மனிதத்தன்மைக்கே முற்றமுற்ற முறணாய் மிருகங்களைக் காட்டினும் மிகச் சீர்கேடான ஸ்திதியில் வாழ்ந்து வந்தன என்பதை யறிவோம். ஆனால் இத்தேசமக்கள் என்றைய தினம், திருகுர்ஆன் ஷரீபை தங்களின் ஹிருதயங்களில் புகுத்தினார்களோ - என்றையத்தினம், திருகுர் ஆனின் நிழல் இவர்களின் தலையின்பால் விழ வாரம்பித்ததோ-அன்றையத்தினமே ஜெயம் வெற்றி இவைகளின் கொடிகள், இவர்களின் கரங்களின் கிடைத்தன-பெரும் பெரும் அரசாங்கம் சுல்தானத்துகள் கிரீடம் எல்லாம் இவர்களின் கால்களை முத்தமிட்டுக் கொண்டிருந்தன இவர்களின் தேயங்களில் அநேகக் கல்விச்சாலைகள் ஏற்பட்டன. மதரஸாக்கள் திறக்கப்பட்டன. நல்லொழுக்கம் பொறமை இவைகள் காணப்பட்டன. புத்தி அறிவு விசாலமாயின அநேக கல்விவான்கள் கிளம்பினார்கள் நாட்டைச் சீர்திருத்தஞ் செய்தார்கள். பலநாட்டைக் கைப் பற்றினார்கள். அத்தேசங்களுக்கும் திருகுர் ஆனின் தத்துவத்தைக் கற்பிக்கலானார்கள், நீதம் ஒழுக்கம் பக்தி சகிப்புத்தன்மை இவைகளை நிலைநாட்டினார்கள் சமத்துவ சகோதரத்துவ சமாதான முறையை சமர்ப்பித்தனர்கள் குலபேதம் வர்ணபேதம் தேசபேதங்களைக் களைந்தெறிந்தனர்கள்—பெண்களுக்கு பூர்ணகண்ணியத்தையும் சங்கையையும் அடிமைகளுக்கு உரிமையையும் நலவு கெடுதி இன்னதென பாகுபாடு செய்து கொள்ளத் தெரியாமல் உழன்றவர்களுக்கு நல்மாராயத்தையும் அனாதைகளுக்கு பாதுகாப்பும். இன்னும் மானிடர்களுக்கு வேண்டிய சகல காரியங்களையும் செய்தனர். ஆகவே இத்துணை அபாரமான வேலையை சேவையைச் செய்து மக்களை முன்னேற்றத்தின் உச்ச ஸ்தானத்தளவில் கொணர்ந்தது திருகுர்ஆன்ஷரீபாகும்—எனவே இந்த குர்ஆன்ஷரீபை அளித்த அந்த ஏக பராபரக்கடவுள் அல்லாஹுத்த ஆலாவிற்கு நாம் காலாகாலம் நன்றி செலுத்தினாலும் அது அற்பமேயாகும்

முஸ்லிம்காள்? மேல் வரைந்ததைக் கவனியுங்கள். திருகுர்ஆனை அதபுடன் திறங்கள். அர்த்தமறிந்து வாசியுங்கள். அவைகளின் பால் உறுதி கொள்ளுங்கள். அதனின் சட்ட திட்டங்களை மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளுங்கள். ஸாலிஹான அமல் செய்யுங்கள் ஏவியதை எடுங்கள் விலக்கியதை தவீருங்கள் நன் முயற்சியை கடைபிடியுங்கள் பின்பு நீங்கள் எங்கிருந்து எங்கே சென்றிருப்பீர்கள் என்பதை உணர்ந்து கொள்வீர்கள்.

---

# "சரித்திரப் பாடம்"

(ஜனாப் S. சீனி முகம்மது)

"ஹாச்....ச்...." என்றார் உபாத்தியாயர். அது தும்மலின் எதிரொலி; அவர் தும்மியவுடனே கைக்குட்டையால் மூக்கைத் துடைத்துக் கொண்டார். கையிலிருந்த பொடி டப்பா தானாக நழுவி தரையில்விழுந்தது, அவரை அறியாமல். "பசங்களெல்லாம் எங்கே?" என்று கர்ஜித்தார் அலட்சியமாக. இதற்கு மறுமொழி சொல்ல யாரும் முன்வரவில்லை. வகுப்பில் பிள்ளைகள் இருந்தால்தானே?

இச்சமயத்தில் 'ஹிஹிஹி' என்று நகைக்கும் தொனி ஸாரின் காதில் விழுந்தது. "இப்ராஹீம்! ஏன் சிரித்தாய்?" என்றார் ஸார். அவர்முகத்தில் ஆச்சரியம் த்வனித்தது.

"இல்லை ஸார் மணிப்பயலுக்கு காய்ச்சல் வந்துடுத்து; அதினால் எனக்கு சிரிப்புவருகிறது ஸார்" என்றான் வகுப்பில் நுழைந்த இப்ராஹீம்.

"முட்டாள் என்றால் நீதாண்டா! அவனுக்கு உடம்புக்கு வந்தால் உனக்கு ஏன் வரது சிரிப்பு? சரி....பசங்கள்ளாம் எங்கே?" என்றார் ஸார் தீனமாக.

"ஸார்! எல்லாரும் விளையாடறான்கள்; நான்தான் மொதல்லே ஸ்கூல் வந்துவிட்டேன். மற்ற பையன்கல்லாம் வந்தவுடனே அடியுங்கள் ஸார்." என்று இப்ராஹீம் ஸாருக்கு யோசனை கூறினான்.

'டண்டண்' என்று ஸ்கூல் கடிகாரம் பத்துமணி அடித்ததற்கும், மூன்றாம் கிளாஸ் பிரபல ஸ்டூடன்ஸ்கள் ஸ்கூலில் நுழைந்ததற்கும் சரியாக இருந்தது. ஸாரின் மீசை படபடவென்று துடித்தது. "டேய்! ஸ்கூல் வர்ர நேரம் இதுதானா?" என்றார் ஸார்.

லத்தீப்:—குட்மார்னிங்க் ஸார்!

ஸார்:—டேய்! என்ன ஏக்கிறே. வந்தனஞ்சொல்லீட்டா விட்டுவிடுவேன்னு நினைச்சுட்டயோ ஏறுங்கடா பெஞ்சுமேல்....உம் எல்லோரும் ஏறுங்கள்.

ஸாருடைய அதட்டலுக்குப் பயந்து எல்லோரும் பெஞ்சுமேல் ஏறிக்கொண்டார்கள்.

பாஸித்:—ஸார்! செய்யத் கொக்கு மாதிரி வளந்தூட்டான் ஸார்! பெஞ்சுமேல் நிக்கறவா எல்லாரையும் பாருங்கோ யார் அதிகம் வளந்திருக்கிறதுன்னு.

ஸார்:—டேய்! அவன் கொக்கு மாதிரி, நீ மாடுமாதிரி; சரிதாண்டா!

இப்ரா:—ஆமாம் ஸார்........ஹிஹிஹீ....

ஸார்:—ஸைலன்ஸ், முட்டாள் என்னடா ஹிஹிஹீங்கறே, உதைகிதை வேணுமா என்ன? ........சிட்டௌன் எல்லோரும் கீழே உட்காருங்கள்.

இஸ்மத்:—ஸார்! நேற்று புதன்கிழமை, கணக்குப்பாடம் சொல்லி தந்தேள். இன்று வியாழன், சரித்திர பாடம் சொல்லித்தரணும் ஸார்!

ஸார்:—சரி, எல்லோரும் புஸ்தகத்தை எடுத்துக்கூங்கோ, அக்பர் கதை படிக்கணும். பாபரைப்பற்றி இரண்டொரு கேள்விகள் போடுவேன் மொதல்லே; பின்னேதான் அக்பரைப் பற்றிச் சொல்லித்தருவேன்.

இஸ்மத்:—"ஆமாம் ஸார்!"

ஸார்:—டேய்! பாபர் மத்திய ஆசியாவில் எந்தப் பகுதியில் (நாட்டில்) பிறந்தார்? சொல்லுடா அப்துல்.

அப்துல்:—பாபர் பர்க்கானா என்னும் நாட்டில்பிறந்து என்னமோ ஒரு இடத்தில் இறந்தார் ஸார்.

ஸார்:—அதிகப் பிரசங்கி,....கேள்விக்குத் தகுந்த பதில் சொல்லிப்பிட்டயே! மறுபடி கேட்காத கேள்விக்கெல்லாம் உளருறயே! முட்டாள்.... சரி டேய்! பாபர் சிம்மாசனம் ஏறும்போது அவர் வயதென்ன?



பாஸித்:—நான்சொல்லறேன் ஸார்! உம்....வந்து....இருபத்துமூன்று அல்லது இருபத்து எட்டு இருக்கலாம் ஸார்.

ஸார்:—சட் சுத்த முட்டாள் வீணாக முட்டாள் பட்டம் ஏண்டா பெத்துக்கறே, தெரியாட்டா சும்மா இருடா ....உம்....நீ சொல்லுடா இப்ராஹீம்?

இப்ரா:—பன்னிரண்டு வயது ஸார்.

ஸார்:—சரி, இந்தியாவில் முகலாய அரசாட்சியை ஸ்தாபித்தவர்யார்? லத்தீப்! நீ சொல் பார்க்கலாம்?

லத்தீப்:—(திறுதிறுவென்னு விழித்துக்கொண்டு) ....உம்....சொல்லறேன் ஸார்....வந்து அதாவது....உம்....இந்தியாவை ஸ்தாபித்தவர் .... யார்....என்றால்....வந்து....அதாவது....உம்ம்ம்ம்.

ஸார்:—என்னடா உளருறே, மக்கு, ஒண்ணுந்தெரியல்லே,உம்....டேய்! நீ சொல்லு இஸ்மத்.

இஸ்மத்:—உம் .... பா....ப், ....பேப்....பர் ஸார், எனக்கு தொன்னல் ஸார்.

ஸார்:—டேய்! கேள்கிறதுக்கு பதில் சொல்லுடா, பேப்பர், ன்னாக்கா என்ன அர்த்தம்டா?

பாஸித்:—ஸார்! ஸார்!! சுதேச மித்திரனைச் சொல்லறான் ஸார்.

ஸார்:—மகா பிரகஸ்பதியடா நீ, மக்கு மக்கு, டேய்! பாஸித்! பாபருடைய புத்திரர் பெயர்என்ன, சொல்லு பார்க்கலாம்?

பாஸித்:—உம் ... அலெக்ஸாண்டர் ஸார்.

ஸார்:—மண்டு மண்டு, டேய் பசங்களா! பாஸிதை எல்லோரும் 'மண்டு'ன்னு கூப்பிடணும், தெரிந்ததா?

இப்ரா:—உத்தரவு ஸார்.

ஸார்:—டேய் பசங்களா! இனி அக்பர் சக்கரவர்த்தியின் அரசாட்சியைப் படிக்கலாம். அதாவது, நான் சொல்லிக்கொண்டு வருவதைக் கவனமாய்க் கேட்கணும், டேய் செய்யத்! நான் சொல்லுவதை அப்படியே எழுதணும் நீ, தெரிந்ததா?

செய்யத்:—என்னுடைய காப்பி நோட்டில் எழுதிக்கறேன் ஸார்.

ஸார்:—பிள்ளைகளே! பாபருக்குப் பிறகு அவருடைய புதல்வரான ஹுமாயூன் சிம்மாசனம் ஏறினார். ஆனால் அரசரான பத்து வருஷத்திற்கெல்லாம் அவர் நாட்டைவிட்டு ஓட நேர்ந்தது. அவர் ஏன் ஓட நேர்ந்தது தெரியுமா?

லத்தீப்:—பிரஜைகளின் கொடுமையை சகிக்க முடியாமல் ஸார்.

ஸார்:—டேய் சட், வாயைமூடுடா, நான் சொல்வதை மட்டும் கேட்கணும். பின்னே 'நச்நச்' என்று பேசிண்டிருந்தே அடிதான்.

இப்ரா:—ஸார் 'மண்டு' தூங்கறான் ஸார்.

ஸார்:—'மண்டு'ன்னாக்கா யாருடா?

இப்ரா:—பாஸிதைச் சொன்னேன் ஸார். பாஸிதைப் பார்த்து எல்லோரும் சிரிக்கத்தொடங்கினார்கள். பாஸிதின் முகத்தில் அசடுவழிந்தது. "கேவலம், ஒரு எளியவன்—பெரும் ஐசுவரியம் சிறிதுமில்லாதவன்—கஷ்டப்பட்டு ஜீவானம்சம் செய்யும் பரத்தைப் பயலுக்குப் பிறந்த இவன், நம்மை—அதுவும்—கோடீஸ்வரனுக்குப் பிறந்த—என்னை, 'மண்டு' என்று நாக்கில் நரம்பின்றி சொல்லிவிட்டான். சரி இருக்கட்டும்" என்று அவனுடைய இருளடைந்த இதயம் எண்ணிற்று. ஆனால் சொல்ல அவன் நாவெழவில்லை. ஸாரின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான். ஸார் அவனைப்பார்க்கவில்லை.

ஸார்:—பிள்ளைகளே! ........ ஹுமாயூன் தம் மனைவியுடன் பாலைவனங்களைக் கடந்து பாரசீகம் சென்றார். போகும் வழியில் அமரக் கோட்டை என்னுமிடத்தில் நமது அக்பர் பிறந்தார். பின்னர் பாரசீக மன்னரின் உதவியைக் கொண்டு........"அடேடே என் பொடி டப்பாவைக் காணோமேடா!"......?......?......

லத்தீப்:—"ஸார்! ஹுமாயூன் பொடி போடுவராக்கும் ஸார்."

ஸார்:...என்னுடையதுடா, என் டப்பியைக் காணேம்டா யார் எடுத்தது?

லத்தீப்:—ஸ்ார் நான் எடுக்கவில்லே. நான் பொடி போடறதில்லே. என்னை வீணுகச் சொல்லாதீர்கள் ஸார். ஒரு சமயம் அப்துல் எடுத்திருப்பான், அவனுட்டே கேளுங்கோ ஸார்.

ஸார்:—டேய்! அப்துல் எடுத்திருப்பான்னு உனக்கு யார் சொன்னது? வீணுக ஒருத்தனைப் பற்றிக் கோள் சொல்லப்படாது...உம்...பாடத்தைக் கவனியுங்கள்......அக்பர் பட்டம் ஏற்றபொழுது அவருடைய இராஜ்யம் மிகச்சிறியதாயிருந்தது. ஆனுல் அவர் சிறிது சிறிதாகப் பல நாடுகளை ஜெயித்துத் தமது இராஜ்யத்தைப் பெருக்கிக் கொண்டார். அவர்...

இப்ரா:—ஸார்!ஸார்!! செய்யத் எழுதாமல் சும்மாயிருக்கான் ஸார்.

ஸார்:—டேய்! பாடம் நடக்கும்போது யாரும் வீண்வார்த்தை பேசப்படாது. பாடத்தின் சம்பந்தமாக எதுவும் பேசலாம். தெரிந்ததா? ....

'சட்'டென்று ஸாருக்கு பொடிடப்பாவின் ஞாபகம் வந்துவிட்டது. மறுபடியும்—"பொடிபோடாமல் பாடம் நடத்த முடியல்லேடா" என்று பரிதாப தொனியில் சொல்லிக் கொண்டார். ஐந்து நிமிஷத்திற் கொருதரம் பொடி உரிஞ்சும் ஸ்ாருக்கு, அது இல்லாவிட்டால் முடியுமா? எனவே போதாக்குறைக்கு, மறுபடியும் பையன்களைக் கேட்கலாம் என்று ஒரு யோசனை தோன்றிற்று ஸாருக்கு.—அந்தப்பொடிடப்பா மேஜைக்கு அடியில் தபஸு செய்துக்கொண்டிருந்ததைஅவர் கண்டாரா? "டேய் அப்துல்! பொடி டப்பாவைக் கண்டாயா? என்ருர் ஸார்.

"நான் பொடி போடறதில்லே, உம் ......எனக்குத் தெரியவே தெரியாது ஸார்!"

"டேய் இப்ராஹீம்! உனக்குத் தெரியுமா?"

"தெரியாது ஸார்."

"டேய்! செய்யத்! உனக்குத் தெரியுமா?"

"ஊஹும் ஸார்."

"டேய் லத்தீப்! உனக்குத் தெரியுமா?

ஸார் ஒன்று சொல்லுகிறேன், அதுக்கு உத்தரவு தரணும் ஸார்......அதாவது......வந்து......வந்து...... பாடத்தின் சம்பந்தமாக உனக்குத் தெரியுமா?" என்று கேட்டால் சொல்றேன் ஸார், பொடி டப்பா சம்பந்தமாக "உனக்குத்தெரியுமா?" என்ருல் எனக்குத் தெரியாது ஸார். நித்தம்." என்ருன் லத்தீப்.

......இச்சமயத்தில் லத்தீபு தனக்கு அருகிலிருந்த பாஸிதிடம், "எனக்கு நன்ருகப் பேசத் தெரிகிறதா? நான் ஸாரிடம் பதில்சொன்னது எப்டி"என்ருன்ரகசியமாக.ஸாருடையநேத்திரங்களிரண்டும்அதிகபிரமிப்பையடைந்தன.

(தொடரும்)

(110-ஆம் பக்கத் தொடர்)

தாள். இவ்விருஅரசர்களும் ஒருவரையொருவர் தழுவி நின்று கண்ணீர் சொரிந்தனர். இந்த வீரமகளின் தியாகத்தை சுதந்திர தாகத்தை நாடு என்றென்றும் போற்றவேண்டும் என்று அக்பர் சொன்னுர். நிறைந்த அமைதியில் எங்கிருந்தோ பேய்காற்று வந்து வீசினது. விளக்கு அணைந்தது. பாயில் இவ்வளவு பேச்சிற்குப்பின் சாந்தியுடன் ஓய்ந்து கிடந்த சம்பாவதி இங்கும் அங்கும் சற்று நெளித்தாள். கைகள் கூப்பினுள். இன்று வீடுதோறும் ரஜபுத்திரர்களும் சிறப்பாக மாதர்களும் "வீரதிலகம் எங்கள் குல தெய்வம்" என கொண்டாடிப் போற்றுகின்ற ரத்தினம் இராணுவின் மகள் பட்டினிக்குப் பலியானுள். இன்றும் வருடாவருடம் ரஜபுத்திரர்கள் சம்பாவதிக்கு ஆரவல்லி மலைத்தொடரில் விழா கொண்டாடுவது காண பரம்பரையாகிவிட்டது.

அக்பர் ஆட்சிகாலத்தில் இந்தியா வந்த யாத்ரீகர்களும் இந்த உத்தம சிறுமிக்கு காவியங்களில் முக்கிய பாகம் தந்தே இருக்கின்ருர்கள்.



# உலக தயாளரும் உத்தம பிரசாரமும்

(காரை ஜனுப் H. M. S. அப்துல்காதிர் ஷாதிலி)

**சத்தியவேத சன்மார்க்க துரைமக்களே!**

சத்திய சன்மார்க்கப் பிரசாரத்தில் எத்துணைக் கெத்துணை எதிரிகளின் இன்னல்களும், இடையூறுகளும் குறுக்கிடுகின்றனவோ, அத்துணைக்கத்துணை அப்பிரசாரகரின் குணமும் பரிசுத்தமடைந்து வருகின்றது. வறுமையும், துன்பமுமே மனிதனுடைய உண்மையான சுபாவத்தை வெளிப்படுத்துகின்றன. ஆகவே, சன்மார்க்கத்தில் வெற்றி பெற நாடுவோர் எப்படிப்பட்ட துன்பத்திற்கும் துயரத்திற்கும் ஆளாகித்தான் முன்னுக்கு வருதல் வேண்டும்.

நபிகள் நாயகம் (ஸல்)அவர்களுக்கு ஹிராவில் தோன்றியமுதல் ஞான ஜோதியானது அவர்களுக்கு அதிகமான நடுக்கத்தையும் திடுக்கத்தையும் கொடுத்துவிட்டது. உடனே தங்கள் விடுதிக்குத்திரும்பிவந்து போர்த்திவிடச் சொல்லிப் படுத்துக் கொள்ளுகிருர்கள். அதன் காரணத்தைக் கேட்டு, கதீஜாப் பிராட்டியார் (ரலி) அப்பெருமானுரின் அரிய குணங்களைப்போற்றி ஆண்டவன் கைவிடமாட்டாரென்று தேறுதல் மொழி கூறுகின்ருர்கள். பொய் நடிப்புடனே வெளிவேடம் தரிப்பவர் இவ்வாறு நடக்கத் துணியார். முதன் முதலில் மனைவியான கதீஜா (ரலி) நண்பரான அபூபக்கர் ஸித்தீக்கு(ரலி)பெரிய தந்தையின் புதல்வரான அலி (ரலி) மருகரான உதுமான் (ரலி) முதலியோரே தீனுல் இஸ்லாத்தில் நன்னம்பிக்கை கொள்ளுகிருர்கள். இந்நெருங்கிய பந்துமித்திரர்களெல்லாம், நபிபெருமான் மாட்டு ஒரு சிறிதேனும் பொய் நடிப்பு இருந்திருக்குமாயின், அதனைத் தெரிந்துகொண்டு அவர்கள்மீது உறுதி கொண்டிருக்கமாட்டார்கள். இஃதொன்றே அம்மகானுபாவரின் சத்தியத் தன்மைக்குப் போதிய சான்ருகக் காணப்படா நின்றது. நபி பெருமானின் பெரியதந்தையான அபூத்தாலிபவர்கள் தமது புத்திரரான அலி (ரலி) இஸ்லாத்தில் சேர்ந்துக் கொண்டதைக் கேட்டு,' நன்று என்மைந்த! அவர் முஹம்மத் (ஸல்) உன்னை நன்மையான மார்க்கத்தின் பக்கத்திலல்லாது வேறெங்கும் அழைக்கமாட்டார்; ஆதலின், நீர் அவருடனே சேர்ந்துக்கொள்வதில் எனக்கொன்றும்ஆக்ஷேபம் இல்லை!" என்று கூறிவிட்டார்.

நபிகள் திலகம் (ஸல்) தங்களுக்கு ஆண்டவனிடமிருந்து... 

முதல் மூன்றுண்டுகள் வரை நபி பெருமான் (ஸல்) இரகசியமாகவே வேலைசெய்து வந்தார்கள். விக்கிரக ஆராதனையால் பலவித நன்மைகளையும் எதிர்பார்த்திருந்த குறைஷியர் சுயநலக் குரோதத்தால் அதிகம் எதிர்க்கத்தொடங்கினர். ஆகவே, அக்காலத்தில் மிகச்சிலரே முஸ்லிம்களாக இருந்தனர். நபி பெருமானுக்குப் பித்துப்பிடித்துவிட்டதென்று சொல்லிப் பரிகாசம் பண்ணியதோடு ஒருவாறு அக்குறைஷியர் நின்றுகொண்டிருந்தார்கள். அதன்பின் வெளிவந்த ஆண்டகையின் மறு உத்தரவைக்கொண்டு நம் பெருமான் (ஸல்) ஸபா மலைமீது ஏறிநின்று தங்கள் குறைஷி இனத்தவர்களை ஒன்று சேர்த்து உபதேசித்தார்கள். உடனே அவர்கள் எதிர்த்தும் ஏசியும் பேசியும் பரிகாசமாகத் தூற்றிவிட்டுத் திரும்பிவிட்டார்கள். அதன்பின் மக்கத்திற்கு யாத்திரையாக விஜயம் செய்யும் வெளியூர் மக்களை நோக்கி நம் பிரானவர்கள் பிரசாரம்புரிவார்கள். இதற்கும் இடங்கொடாது அந்த "மாந்திரீக" வாதியிடம் ஒருவரும் நெருங்க வேண்டாமென்று பயமுறுத்தாட்டி வந்தார்கள். இதையும் நபிகள் நாயகம் (ஸல்) பொருட்படுத்தாததால் கஃபாவுக்குள்ளே நுழையக்கூடாதென்று தடைசெய்து, அப்பெருமானுரைப் பின்தொடர்ந்து ஏளனம் பண்ணுவார்கள். எதிரிகள் எத்தனையோ விதமான இம்சைகளையெல்லாம் செய்துவந்தார்கள். ஆனுல், நபி பெருமானுர் (ஸல்) அதற்கெல்லாம் ஒரு சிறிதும் அஞ்சுவது வழக்கமில்லை. அதுகண்டு வேறு எளிய முஸ்லிம்களையெல்லாம் அக்குறைஷியர் அதிகம்துன்புறுத்தத் தொடங்கினுர்கள்; அவரவரும் தத்தம் பந்துக்களையும் அடிமைகளையும் அளவுகடந்து துன்புறுத்திவந்தார்கள். எரிக்கின்ற வெய்யிலிலும் கொதிக்கின்ற மணலிலும் அவர்களைப் போட்டு வாட்டுவார்கள். ஆனுல், அவர்களேனும் நபிகள் திலகமேனும் அதுகண்டு ஒரு சிறிதும் மனம் தளங்கினுரில்லை.

துன்பங்களாலும் துயரங்களாலும் ஒன்றும் பலியாதெனக்கண்ட குறைஷியர் "உத்பா பின் ரபீஆவை" அனுப்பி பணத்தின்மீது விருப்பமிருப்பின் ஏராளமான திரவிய சேகரம் செய்து கொடுப்பதாகவும், அதிகாரத்தின்மீது விருப்பமிருப்பின் நபி பெருமானைத் தங்கள் தலைவராக நியமித்துக்கொள்வதாகவும் ராஜ்யத்தின்மீது விருப்பமிருப்பின் அரசாகவே நியமித்து விடுவதாகவும், அல்லது பேய் பிடித்திருப்பது வாஸ்தவமாயின் தக்க வைத்தியர்களைக் கொண்டு பார்க்கச்செய்வதாகவும் உறுதிமொழி கூறச் சொன்னுர்கள். அதுகேட்டு நபி பெருமான் (ஸல்) பரிசுத்த குர்ஆன் ஷரீபின் 12-வது அத்தியாயத்திலுள்ள ஆரம்ப வாக்கியங்களில் கூறப்பட்டுள்ள அவ் வேதத்தின் பெருமையைப்பற்றியும் அதிலுள்ள கட்டளைகளைப் பின்பற்றுவோர் அடையப்போகும் நன்மையைப்பற்றியும், அவற்றினை நிராகரிப்பவர் அடையப்போகும் தீமைகளைப் பற்றியும் விளக்கிக் காண்பித்தார்கள். இதைச் செவியேற்றவுடன் உத்பா என்ற வம்பன் ஒன்றுங் கூறுது வாளா திரும்பிவிட்டார்.

(தொடரும்)



# நமது மாலுமி

பாலக்கரை. ஜனுப் டி. எஸ். ஏ. ரசூல்.



வானத்திலே வளர்பிறைச் சந்திரன்; கடல் கொந்தளிப்பின்றி அமைதி கொண்டிலங்குகின்றது. கப்பல் கனஜோருடன் சென்றுகொண்டிருக்கிறது. மக்களின் பிரயாணம் மகோன்னத முறையிலே நடந்துக் கொண்டிருக்கிறது ஆண் பெண் அனைவரின் அகங்களும ஆழ்ந்த குதுகுலங் கொண்டு ஆர்ப்பரிக்கின்றன. கவலை, கஷ்டம், துக்கம், இவைகளைப் பற்றியே, அவர்கள் அறியா திருக்கின்றனர். அணுவளவேனும் குந்தக மின்றி கடல் பிரயாணம் நடை பெற்றுகொண்டிருக்கிறது!

* * * *

காலம் ஒன்றிருந்தது! இந்திய இஸ்லாமிய உலகிலே இம்மியளவேனும் இன்னல் காணுது முஸ்லிம் பெருங்குடி மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர் தனி மகனும, தன் நிகர் இன்றி காலங் கடத்திக் கொண்டிருந்தான்! இஸ்லாமிய ஆட்சியே "பாரெங்கும் பரிணமித்துக் கொண்டிருக்கிறது" ஏழை என எடுத்தியம்பவும்-எடுத்துக் காட்டவும் கூட கடினம்! வறுமை, கொடுமை பசி யெனச் சொல்லவும் வகையில்லை! இம்மாதிரியாக இந்திய இஸ்லாமியர்கள் வாழ்ந்தனர் ஒரு காலத்திலே!

* * * *

கால நிலை மாற்றமும், காலச் சக்கரத்தின் கடு வேகமும் இயற்கையாகவோ. நியதிப்படியோ நிகழ்ந்தது! அடுத்து கண்டதென்ன? வானத்தின் வளர் பிறை மீது கரு மேகங்கள் சூழ்ந்தன; அத்துடன் இடியும் மின்னலும்! சூருவளியும் கூட.

கடலிலும் கொந்தளிப்பு; சுழலும் அதிகம்! கடலின் அலைகள் கப்பலை கனவேகத்திடன் தாக்குகின்றன கப்பல் திசைமாறி விட்டது! மக்கள் நிலை தடுமாறி மூர்ச்சிக்கின்றனர். பாய் மரமோ பழுதாகி விட்டது! கப்பலின் மாலுமி காணும்! அடுத்து நடக்க வேண்டியதென்ன? அந்தோ! பரிதாபம், பயங்கரம், கொடூரம் இத்தியாதி. கப்பல் கண்ட கண்ட திசையெல்லாம், காற்றடிக்கிற போக்கிலே தத்தளிக்கிறது!

* * * *

ஏனே, இந்திய இஸ்லாமிய உலகிலே திடுக்கிடத் தக்க பல மாறுதல்கள் நிகழ்ந்தன. ஆட்சி, வீழ்ச்சிகண்டது; அதிகாரம் அடிமைத் தனம் கண்டது; வாழ்வு தாழ்வாயிற்று; முஸ்லிமகள் மருண்டனர்! செய்வதின்னதென் றறியாது திகைத்தனர்! தகுந்த தலைவன் ஒருவனுமில்லை! தக்க வழிகாட்டி தோன்றவில்லை! திடுக்கிட்டுப்போய் தவித்து நின்ற முஸ்லிம் சமுதாயம், திசை தெரியாது தெறித்துப் போய் திக்கு முக்காடியது! அந்தோ! என்ன பரிதாபமான காட்சி!

* * * *

திசைமாறி தவித்துத் தடுமாறிய கப்பலைக் கண்டனர் சில சுய நலமிகள்! தக்க சமயம் இதுவே என மக்களை மயக்கி, தருவோம் தாங்கள் ஆக்கமென ஆர்ப்பரித்து மாயவலை வீசினர் நச்சுப் பொய்கையை தேவாமிர்த மென பிரயாணிகளும் எண்ணி. தங்களின் கப்பலிலே அவர்களுக்கு இடங் கொடுத்த தோடல்லாது, அவர்களின் ஆணைப்படி அடிமைப் பட்டு அடிவருடவும் ஆரம்பித்தனர்! துணிந்தவன் தூங்கவாரம்பித்தால் தொடையில் கயிறு திரிக்க அதை விடவேறு சமயமும் வேண்டுமா? கப்பலைக் கைப்பற்றிய சுய நலமிகள், அப்பாவி பிரயாணிகளை மனங் கொண்ட மட்டும் கசக்கிப் பிழிந்தெடுத்தெனர். என் செய்வது? வேறு வழியின்றி பிரயாணிகள் பின் பாட்டு பாடவும், "ஆமாம் சாமி" போடும் நிலைக்கும் ஆளாயினர்.

* * * *

திகைத்துத் தடுமாறிய முஸ்லிம் சமூகத்திலே, ஆக்கமும் ஆதரவு மளிப்பதாகக் கூறி சில சுய நலவாதிகள் கிளம்பி கட்சி காட்டி கசக்கிப் பிழிந்தனர்! வேற வழியின்றி முஸ்லிம்களும் அவர்களின் சொற்படி ஆடினர்! சமூகத் துரோகிகளும், துவேஷிகளும், விரோதிகளும் கூட முஸ்லிம்களுக்குத் தலைவராகத் திகழ்ந்து, சிலரின் சூழ்ச்சியால் தலைமைப் பதவியு மடைந்தனர். மேலே மெருகிட்டு உள்ளே வேரறுக்கும் கயவர்களின் கூத்து தொடர்ந்து எத்தனை நாட்கள் நடைபெறும்?

* * * *

இரவும் பகலும் மாறிக்கொண்டே இருக்கிறது; சுகமும் துக்கமும்கூட நீடித்து நிலைப்பதில்லை!

கப்பலில் சுய நலமிகள் சிலர் கூடி, பிரயாணிகளை வஞ்சித்து வதைத்துவருவதைக் கண்டு, திடுக்கிட்டான் ஒருவன்! துரோகிகளின் துரோகச் சிந்தனைகளைக் கண்ணுற்ருன்; அவன் மனம் பதைத்தது! உதிரம் கொதித்தது! "துணை ஒருவன் தேவையில்லை; தானே திறம்பட கப்பலைத் திசை நோக்கி ஒட்டமுடியு"மென முழங்கினன். சுய நலமிகள் பரிகசித்தனர்; இகழ்ந்து பேசினர். எனினும் அவன் விடவில்லை! தன்பால் தன் தோழர்களைத் திரட்டினன்; உண்மையை உரத்துக் கூவினன்; வஞ்சகர்களின் வஞ்சகத்தை விளக்கினன்! அவன் தோழர்கள் விழித்தெழுந்தனர்; உண்மை அறிந்தனர். "தங்களிடையே செம்மைபெற—தமது கப்பலை நடத்துவிக்க ஒரு மாலுமி கிடைத்துவிட்டான்" என்ற சந்தோஷத்தினல் ஆரவாரித்தனர். சுயநலமிகளின் பரிகசிப்பு—அங்கலாய்ப்பாக மாறியது. அடுத்து பல முயற்சிகள் செய்தும், ஆகாது இனி ஒன்றும் என அறிந்தபின், ஒதுங்கி நின்று வசைபுராணத்தோடு விலகிவிட்டனர்!

கப்பலுக்குத் தக்கதொரு மாலிமி கிடைத்து விட்டான்! இனி கப்பலுக்குத் தடுமாற்றமேது? குமுறலும், கொந்தளிப்பும் கப்பலை என்னசெய்துவிட முடியும்? பிரயாணிகளும் இனி தாம் சேரவேண்டிய இடத்திற்குச் செல்லவேண்டியதுதானே!

* * *

இந்திய முஸ்லிம் சமூகம் நிலை தடுமாறி, பிரமித்துப்போய் நிற்கும்போது, வகையுடன் வாழ வழிதெரியாது விழிக்கும்போது, கொந்தளிக்கும் கடலிலே, தத்தளிக்கும் ஒருவனுக்குக் கிடைத்த மரத்துண்டு போல, முஸ்லிம் பெரும் குடிமக்களிடையே ஒப்புற்ற தலைவராகத் தோன்றினர் ஓர் நிகரற்ற இலட்சிய வாதி! தக்கதோர் தலைவர், தங்களுக்குக் கிடைத்துவிட்டதாக முஸ்லிம்களும் சந்தோஷத்தால் ஆர்ப்பரித்தனர். திசை தப்பித் திணறிய கப்பலுக்கு ஒரு திறம்படைத்த மாலுமியாகத் தோன்றினர் அவர். சுயவர்களின் கள்ளக் கூச்சல்களும், வஞ்சகர்களின் விதண்டாப் பேச்சுகளும், அவரை என்ன செய்துவிட முடியும்? எனவே, அவர் நாடிச்செல்லும் காரியத்திலே தோல்வி ஏற்பட காரணமில்லை! இன்றும், அன்றும், என்றுமே, எட்டுத்திசையிலுமே அவர் வெற்றி முரசு கொட்டப்போவதை வீணர்கள் கண்டு வெதும்பியழத்தானே வேண்டும்!

நாளைவரும் டிஸம்பர் 25-ந்தேதி, நமது மாலுமியின் 69-வது வருட விழாவைக் குறிப்பிட ஓடோடியும் வருகிறது! இஸ்லாமியத் தோழர்களே! பக்குவமான முறையிலே அதனைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்!

காயிதே அஃஜம், அத்தா-எ-ஹிந்த், நமது சமுதாயக் கப்பலின் திறம்படைத்த ஒரு மாலுமி! திசை கெட்டுத் தடுமாறிய முஸ்லிம் பெரும் குடிமக்களின் ஓர் ஒப்பற்ற வழிகாட்டி! கலங்கறை விளக்கு! அவரை மாலுமியாகக் கொண்ட நமது சமூகத்தின் பாக்கியமே பாக்கியம்! இனி நமது சமுதாயக் கப்பலுக்குப் பயமில்லை! பாறைகள் பல குறுக்கிடினும் பக்குவத்துடன் அவைகளைக் கடந்து, "பாக்கிஸ்தான்" எனும் புண்ணியத் தலத்திற்கு விரைவோமாக! அதோ நமது தலைவர் வழிகாட்டுகிறார். பின்பற்றுங்கள் நிர்ப்பயமின்றி! காணுங்கள் வெற்றி, வாகை மாலை சூடி!

வாழ்க இஸ்லாம்! வாழ்க முஸ்லிம்கள்! வாழ்க நமது ஒப்பற்ற மாலுமி காயிதே அஃஜம் ஜின்னஹ்! வாழ்க "பாக்கிஸ்தான்" எனும் புனித பூமி!

---





# கலைமலர்

(அல்லாமாகாஜி ஷேய்கு முஹம்மது கவி (ரஹ்) பாடியவை)

(கீரனூர் ஜனுப் மௌல்வீ பாஜில் ஸிராஜி மொழி பெயர்ப்பு)

மதுரை ஜில்லாவிலே, பழனித் தாலுக்காவிலே கீரனூர் என்பது ஓர் செழிப்பான சிறு கிராமம். நீர்வளம், நிலவளம் பொருந்திய ஊர்; எங்கு நோக்கினும் பச்சைப்பசேலென்று இருக்கும் இயற்கைக் காட்சிகள் தாங்கி இருக்கும் ஓர் குளம் அங்கு உண்டு. ஷண்முக நதி ஜீவநதியாக அங்குபாய்கிறது. நான்கு பக்கங்களிலும் நஞ்சைப்பூமி. நடுவாலே கீரைப்பூமி உள்ளது. 50 வருஷங்களுக்குமுன் கவிவாணர்கள், புலவர்கள், உலமாக்கள், பார்சி குருக்கள் நிறையவாழ்ந்து வந்தார்கள். அக்காலத்தில் "ஸய்யித் ஆபாத்" என்ற பெயரால் அது அழைக்கப்பட்டது. ஏனெனில், ஞானிகளும், அவுலியாக்களும் அன்று அதிகம் இருந்தார்கள். மற்றபடி பொது ஜனங்கள். 90% முஸ்லீம்கள். முஸ்லீம்கள் எல்லோரும் வியாபாரிகள். செல்வந்தர்கள். அவர்கள் இன்றும் நீலகிரி மலைப்பிரதேசங்களிலும் மலபார் பிரதேசங்களிலும் பெரும் பெரும் வர்த்தகர்களாக இருக்கிருர்கள். எல்லோரும் அநேகமாக தர்ம சிந்தனை உடையவர்கள். மத்ரசாக்கள் அநேகம் இருக்கின்றன. இத்தகைய கல்வியாலும் செல்வத்தாலும் ஊர்ச்செழிப்பாலும் சிறப்பு வாய்ந்த கீரனூர் கிராமத்திலே 100 வருஷத்துக்குமுன் அல்லாமா காஜீ ஷெய்கு முகம்மது ஸாகிப் (ரஹ்) அவர்கள் வாழ்ந்து வந்தார்கள். கவர்ன்மெண்டார்கள் அவருக்கு "காஜீ" என்ற பட்டம் கொடுத்து அவ்வூருக்கு நீதிபதியாக நியமித்தார்கள். அன்று முதல்பொதுஜனங்கள் அவர்களை "கோர்ட்டு காஜீ" என்று அழைப்பார்கள். அவர்கள் அரபியிலும் பார்சியிலும் மிகப் பாண்டித்தியம் வாய்ந்து விளங்கினர்கள். அரபியில் "ரஜ்ஜானதுல் இல்மு" என்று ஓர் காவியம் பாடியிருக்கிருர். அதை இப்பொழுது அவரின் பேரனின் பேரனுகிய அடியேன் தமிழில் மொழி பெயர்த்து கீழே தருகிறேன். வாசகர்கள் கவனித்துப் பார்ப்பார்களாக!

(1) எவன் மிகப் பெரிய கல்விமானுக இருக்கிருனே அவன் அவ்வளவுக்கவ்வளவு தாழ்மையாக நடந்துகொள்வான். மரம் நன்கு கனிகளைப் பெற்று விடுமானல் அம்மரத்தின் பல கிளைகளெல்லாம் பழத்தின் வலுவினால் கீழ் நோக்கி பணிந்து விடுகின்றது. எவ்வளவுக்கெவ்வளவு ஒரு மரம் காய்களையும் பழங்களையும் அதிகம் பெற்றுவிடுமோ அப்பொழுது அம்மரத்தின் கிளைகள் வாதுகள் யாவும் தரையை நோக்கி வளைந்துவிடுகின்றது. அதுபோல் ஒருவனுக்கு கல்வி, அறிவு அதிகமாக ஆக அவனுக்கு சகலரைப் பார்க்கினும் தாம் எல்லா வகையிலும் குறைந்தவன் என்ற தன்மை ஏற்படுகின்றது. இத்தன்மை இயற்கையாக மனிதனுக்கு ஏற்படக்கூடியது.

(2) நல்லபயிருக்குகுளிர்ந்தநீரைப்பாய்ச்சினல் அது நாளடைவில் செழித்தோங்கி வளரும். அவ்வாறில்லாது வெந்நீரை வார்த்தினல் உடனே அது கருகி அழிந்துவிடும். அத்தன்மைபோல் வணக்கம் எனும் வித்துக்கு ஹலால் எனும் தண்ணீரைப் பாய்ச்சினல் அது நாளடைவில் ஓங்கி வளர்ந்து பயன் தரும். அவ்வாறில்லாது ஹராம் எனும் வெந்நீரைப் பாய்ச்சினல் வணக்கம் பிணக்கமாய்ப் போய்விடும். சன்மார்க்கத்திற்கு ஆகுமாக்கப்பட்ட விஷயத்துக்கு ஹலால் என்றும் ஆகுமாக்கப்படாத விஷயத்துக்கு ஹராம் என்றும் சொல்லப்படும்.

(3) நிஃமத் என்று கூறப்படும் சுகண்டிகளையும் பாக்கியங்களையும் நீ பெற்றிருந்தபோதிலும் கல்வியை மட்டும் நீ பெறவில்லையானல் சங்கை பெறமாட்டாய். ஏனெனின் அல்லாஹுத ஆலாவை அறியவே உன்னைப் படைக்கப்பட்டது. ஆதலின் கல்வியைப் பெற்று அவனை அறிந்துகொள்.

(4) நீ கல்வியைக் கற்றுக்கொண்டாயானல் அது உன்னை விட்டுத் தப்பிப்போகாது. கைசேதமான உலகின் விநோதங்களெல்லாம் மறைந்துவிடக்கூடியது. ஆனல் கல்வி மட்டும் காணமற் போகாத செல்வமாகும்.

(5) கல்விக்கு புத்தி வேண்டும். புத்தியில்லாதவனுக்கு கல்வி வராது. கல்விக்கு புத்தி வேண்டுமென்றாலும் புத்தியைப் பார்க்கிலும் கல்விதான் மேல். உதாரணமாக தேன் வேண்டுமானல் குழவி வேண்டும். குழவியில்லாது தேன் கிடைக்காது. ஆயினும் குழவியைப் பார்க்கிலும் தேன் தான் உயர்ந்தது; மேலானது. அத்தன்மைபோல் கல்விதான் முக்கியம்.

# மண் குதிரையை நம்பாதே

(கம்பளை அல்ஹாபிஸ் M. I. நூருல்மாதிஹுல் கௌது)

மண் குதிரையின் மேலேறி சவாரிசெய்வது அசாத்தியமல்லவா?

அதேபோன்று நம் இஸ்லாமிய மதத்தில் இளைஞர்களான சில மண் குதிரைகளுண்டு. அவர்கள் சொற்செயல் நம்பிக்கை முதலியவைகள் யாவும் இஸ்லாமிய மதத்திற்கு முற்றிலும் முரணனவை.

அவர்களை நம்பினால் மண் குதிரையை நம்பினதற்கொப்பாகும். அவர்கள் மக்கா மதீனா போன்ற அரேபிய நாடுகளில் பஞ்ச மேற்பட்டிருக்கிறதாயும், அராபியர்கள் பசியால் வாடுவதாயும் இதற்காக பல தேசங்களுக்குச் சென்று முஸ்லிம்களிடையே நிதி திரட்டும் கோஷ்டிகளை யேற்படுத்தவேண்டுமென்றும் பலர் பல தெருக்களிலும் சிலர் வணக்க ஸ்தலங்களிலும் மார்க்க பிரசாரம் செய்து இறுதியில் மக்கா மதீனா போன்ற அரேபிய நாடுகளில் ஏற்பட்டிருக்கும் பஞ்சத்தையும் அரேபியாமக்களின் கஷ்ட நிலைமையைப் பற்றியும் குறித்துக் காட்டி நிதி திரட்டுகிறார்களாம்.

இப்படி சன்மார்க்க போதனை செய்து நிதி திரட்டி அரேபிய மக்களின் கஷ்டத்தை நிவர்த்திப்போர்களை அவ்விளைஞர்கள் அலக்ஷியமாகக் கருதியதுமல்லாமல் மேலும் அவர்கள் கூறுவதாவது: இந்த நிதி திரட்டும் கட்சியினரை யடக்கி யொடுக்கவேண்டும், இதற்காக எந்த உதவி ஒத்தாசையும் செய்ய யாரும் முன்வரக்கூடாது-என்றும் துஷ்பிரசாரம் செய்து வருகிறார்கள்.

இந்த இளைஞர்களுக்கும் அந்த அரேபிய மக்களுக்கு மிடையிலிருக்கும் (Magic Square) மாயச் சக்கரம் என்னவென்று யாருக்குத் தெரியும்? உண்மையில் அப்படி குரோதம் ஒன்றும் கிடையாது.

ஆனால் இப்படி நம் அரேபிய மக்களை இவர்கள் இழிவாக காணுவதற்குப் பொதுவாக ஓர் காரணமுண்டு.

அதாவது, அந்த இளைஞர்களில் ஹிருதயத்தெளிவும், மூளையின் சுத்தியும் பதபக்தியும் இஸ்லாமின் வரலாறும் சகோதரத்துவமும் ஒருங்கே திரண்டிருக்குமாயின் ஒருக்காலும் இப்படி மதவிரோதப்பிரசாரம் செய்ய முன் வரவும் அதைப்பற்றி கருதவுமாட்டார்கள்.

இவர்களுக்கு இஸ்லாமே இன்னது என்று தெரியாததன் காரணமாகவே இப்படி துஷ்பிரசாரம் செய்ய நேரிட்டது.

ஆகவே இந்த இளைஞர்களுக்கு சில பாடங்களை கற்றுக்கொடுக்க நான் விரும்புகிறேன்.

இளைஞர்களான சோதரர்!

நாம் நம்முடைய இஸ்லாமிய மதத்தைச் சிரமேற்கொண்டு எப்படி கண்ணியப்படுத்துகிறோமோ அப்படியே அவ்வரேபிய மக்களையும்சிரமேற்கொண்டு கண்ணியப்படுத்துவது அவசியம்.

அவர்கள் பஞ்சத்தால் வருந்துங்கால் நாம் சுக வாழ்க்கையாக வாழமுடியாது.

இது காரணமாய் அவர்களின் நேத்திரங்களிலிருந்து வடியும் கண்ணீர்களை நாம் அது கண்ணீர் என்று எண்ணாமல் உண்மையிலே அதைச்செந்நீர் என்று கருதவேண்டும். முஸ்லிம்கள் எங்கெங்கு வசிக்கின்றனரோ அவர்களுக்கெல்லாம் இதுவிஷயம்பற்றி ஆற்றல் வேண்டும்.

ஏனெனில், நமது பரிசுத்த சன்மார்க்கத்தைப் பரிபூரணமாய் நமக்குக் கற்றுக்கொடுத்தவர்களும், அதில் நம்மை யொழுகச் செய்தவர்களும் அவ்வரேபியர்களே.

நமது ஜீவிய காலங்களை எந்த முறையில் கழிக்கவேண்டுமென்றும், எத்திசை நோக்கி நமது உடல், பொருள், ஆவி இம்மூன்றையும் தத்தஞ் செய்யவேண்டுமென்றும் நமக்கு பகுத்தறிவை யூட்டினவர்களும் அவ்வரேபியர்களே.

நமது நடையுடை பாவனைகளால் ஏற்படும் நன்மைகளுக்கு மறுமையில் ஆண்டவனிடம் நற்கதியுண்டுமெனவும், இவைகளினால் நிகழும் தீமைகளுக்கு அங்கு அவனிடம் துர்க்கதியுண்டுமெனவும், ஒருமுஸ்லிம் இவ்விரண்டிலும் எதை யனுஷ்டிக்கவேண்டுமெனவும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நமக்கு அறியப்படுத்தியவர்களும் அவ்வரேபியர்களே. இன்று பல தேசங்களிலும் பல்லாயிரக்கணக்கான முஸ்லிம்கள் திரள்வதற்கும், அவரவர்களின் ஹிருதயங்களில் இஸ்லாமென்னும் ஜெயக்கொடியின் குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருப்பதற்கும் காரணம் அவ்வரேபியர்களேயல்லாமல் வேறு யார்?

சன்மார்க்கத்திலும் தேசிய விஷயத்திலும் சீர்திருத்தமான முறையில் நம்மைக்கொண்டு வரவேண்டுமென்பதே அவர்களின் பூரண நம்பிக்கை.

இப்படிப்பட்ட மேதாவிகளான குருமார்களை நாம் எப்படி மறக்கமுடியும்? ஒருக்காலும் மறக்கமுடியாது.

பிரார்த்தனை:

ஆண்டவா! உனது வீட்டைச் சுமந்து கொண்டிருக்கும் திருமக்கமா நகரிலுள்ள எங்கள் சகோதரர்களுக்காகவும், உனது காருண்யம் நிறைந்த எங்கள் ரஸூலே அக்ரம் (ஸல்) அவர்களின் சமாதியைப்பெற்றிருக்கும் திருமதீனமா நகரிலுள்ள சகோதரர்களுக்காகவும் இன்னும் இதைச்சார்ந்த இதர அரேபிய நாடுகளில் வசிக்கும் முஸ்லிம் சகோதரர்களுக்காகவும், அவர்களின் பஞ்சத்தை நிவர்த்தித்துக்கொள்ளவேண்டி உலகிலுள்ள முஸ்லிம்கள் யார் யார் உதவிஒத்தாசை செய்கின்றார்களோ அவர்களுக்கு நீயே இகபர வாழ்வைக் கொடுப்பாயாக.

மேலும் மண் குதிரைகளைப் போன்றுள்ள இளைஞர்களான சில மூடர்களை நம்பாமலிருக்கவும் அவர்களுக்கு பகுத்தறிவைக் கொடுப்பதற்கும் நீயே துணை புரிவாயாக!

குறிப்பு:—சென்ற 1944ளு நவம்பர்மீ வெளிவந்த நூருல் இஸ்லாம் பத்திரிகையில் 15-வது பக்கத்தில், நாடகமே உலகம் என்னும் தலையங்கத்தின்கீழ் சில அச்சுப்பிழைகளிருந்ததால் நான் கீழே குறிப்பிட்டிருக்கும்படியான சரியான வார்த்தைகளுடன் அவைகளைத் திருத்திக்கொள்ளும்படி வாசகர்களை மிகத் தாழ்மையுடன் வேண்டிக்கொள்ளுகிறேன். அவைகளாவன:—

1. M. I. நூருல் மாதிஹுல்கௌது,
2. நடிகைகளை.
3. அதபுமாலையில்,
4. ஸூரதுல்மாஊன்,
5. மிஷ்காதுல்மஸாபீஹ்,

(121-ஆம் பக்கத் தொடர்)

(6) ஒருவனிடத்தில் கல்வி யிருந்தால் அறிவு உண்டு என்று சொல்லலாம். கல்வியில்லாது வெறும் அறிவுமட்டும் உள்ளவனை மூடன் என்று சொல்லலாம்.

(7) ஒருவன் கல்வியைமட்டும் கற்றுக்கொண்டால் அவன் பெருமை கொள்ளப்படாது. அவன் அக்கல்விக்குத் தக்க செய்கை புரியவேண்டும். அது தான் கல்விக்கு அழகு. ஏழைகட்கு தர்மம் கொடுப்பவன் தான் சீமான். தர்மம் கொடாதவன் லோபி யாவான். அத்தன்மைபோல் அமல் புரியாதவன் கல்விமானல்ல.

(8) நீ கல்வியைப் பெற்றுக்கொண்டால் உன்னிடம் பட்டணங்களிலிருந்து ஜனங்கள் கூட்டம் கூட்டமாக வருவார்கள். நன்கு பழங்கள் பழுத்து இருக்கும் மரத்தளவில் பட்சிகள் வெகு தூரத்திலிருந்து பறந்து வந்து மரத்தில் கூடி பழங்களைப் பருகும். அத்தன்மைபோல் கல்வியுள்ளவர்களிடத்தில் தான் ஜனங்கள் கூடி வருவார்கள்.

(9) ஒரு மனிதன் மேன்மையானவனா? தாழ்மையானவனா என்று நீ பார்த்தால் அவனது ஜாதியையும் நிறத்தையும் குலத்தையும் பாராதே. அவனிடத்தில் கல்வி இருக்கிறதா? கல்விக்குத்தகுந்த தக்வா எனும்பயபக்தி இருக்கிறதா? என்று மட்டும் பார். முத்து சிப்பியில் உண்டாகிறது. ஆயினும் சிப்பியிலிருந்து வெளிவந்த முத்துதான்மேலானது. பூச்சியிலிருந்து வந்த பட்டுத்தான் சிறந்தது. பூனையினின்று உண்டான புனுகு தான் உயர்ந்தது. அத்தன்மைபோல் மனிதனினின்று வந்த கல்விதான் மேலானது. ஆதலின் கல்வியுள்ளவனே சிறந்தவன்.

(தொடரும்)

# முஸ்லிம்களின் மத்திய காலக் கலாஞானம்

(ஜனுப் வ. மி. ஷம்சுத்தீன்சாஹிப் மொழி பெயர்ப்பு)

(முன் 87-ஆம் பக்கத் தொடர்)

[" இஸ்லாமிக் கல்ச்சர் " என்ற ஆங்கிலப் பத்திரிகையில், டாக்டர் முஹம்மது அப்துல் முயீத்கான் அவர்களால் எழுதப்பட்ட கட்டுரையின் சாராம்ஸம்.]

சட்ட ரீதியான நோக்கத்தில், ஷாபி ஹனபியாக்களுடைய பாடசாலைகள் வித்தியாசமாகக் காணப்பட்டபோதிலும், குர்ஆனின் கற்பனைப்படி மனிதன் ஆண்டவனை அறிந்துகொள்ளுந் தன்மையில், கல்வித்திட்டங்கள் இவ்விரு பாடசாலைகளிலும் ஒன்றாகவே காணப்பட்டன. முஸ்லிம்களின் கல்வித்துறையில் அதன் தத்துவங்கள் ஒரே உணர்ச்சியுடன் காணப்பட்டபோதிலும், அவைகளை அடைவதில் பலநோக்கங்களும், ஹேதுக்களும், கையாளப்பட்டன. இமாம் அபூஹனீபா அவர்கள் பின் வருமாறு கூறியுள்ளார்கள் :— " அநுஷ்டானமற்ற படிப்பு அர்த்தமற்றது. கல்வி என்பது ஆன்மாவிற்குரிய நலன்களையும், கெடுதிகளையும்தெரிந்து கொள்வதுதான். ஆகவே, ஒருவன் இகபரமிரண்டிற்கும் தேவையான நன்மை தீமைகளைப் பிரித்தறிந்துகொண்டு ஒழுக்கத்தையும் கடைப்பிடிக்கவேண்டும். அவைகள், அவனை இறைவனின் கோபத்தினின்றும் கெட்ட வழிகளிலிருந்தும், விலக்கிவிடும், இதிலிருந்து, இமாம் அபூஹனீபா அவர்கள், "**கல்வி என்பது நேர்மையான வாழ்க்கையும், தியானமும்**" என்று சொல்வதாக அறியக்கிடக்கின்றது. ஹனபியாக்களுடைய மத்ஹபைப் தழுவிய சர் நூஜியும், "கல்வி என்பது இறைவனை அடைவது (தக்வா)" என்று கூறுகின்றார். ஆகவே, "**தக்வா**" என்னும் இவ்வார்த்தை மனத்தால் அறியக்கூடிய ஒரு சிக்கலான பொருளாக இருப்பதால் அதற்கு விரிவுரை தேவைப்படுகிறது.

"**தக்வா**" என்பதின் கருத்தைப் பல நூலாசிரியர்கள் பல விதமாகக் கூறியுள்ளார்கள். "தாலிம்-அல்-மூத்த அல்லீம்" என்ற நூலின் விரிவுரையாளர், "ஷரீயத்தின்படி ஆத்மார்த்தீகத்தைக் கடைப்பிடித்து ஆத்மசுத்தியாக" யிருப்பதுதான் தக்வா என்று கூறுகின்றார். ஆண்டவனுடைய விலக்கலைத் தவிர்த்து நடப்பது தான் "**தக்வா**" என்று உமர் இப்னு அப்துல் அஜீஸ் கூறுகின்றார். சில பேராசிரியர்கள் இதை "முத்தக்கீ" என்று கூறி, ஷரீயத் தடுக்காதவைகளைச்செய்வது என்று கூறுகின்றார்கள். ஹஜரத் அலி (ரலி) அவர்கள், கீழ்க்காணும் 5 விஷயங்களைக்கொண்டிருந்தாலொழிய "தக்வா" கிட்டாதென்று கூறியிருக்கின்றார்கள் :— (1) வாழ்க்கையில் போராட்டத்தையும், துன்பங்களையும் உகந்து கொள்ளுதல். (2) இறைவனுடைய கட்டளைக்கும், கருணைக்கும் பாத்திரமாதல், (3) பெருமையைவிட்டு தாழ்மையான குணத்தை தேடிக்கொள்ளுதல், (4) மிதமான உணவை விரும்புதல், (5) மரணத்துக்குப் பின் மனித வாழ்க்கையைத் தெரிந்துகொள்ளுதல். மேலும், இந்நூலின் விரிவுரையாளர் "தக்வா" என்பதை 3 பிரிவாகப் பிரித்துக் கூறியுள்ளார். (1) நித்திய தண்டனைக்குரிய நரகத்தீயைப்பற்றிபயந்து தகாத விஷயங்களிலிருந்து நீங்கியிருத்தல்; குர்ஆன் ஆயத்து இதற்கு ஆதாரம். (பத்ஹ் 26) தன்னைத்தானே திடுத்தல். (2) எல்லா விதமான பாப காரியங்களிலிருந்தும் விலகியிருத்தல். இதுதான் ஷரீஅத்தெனச் சொல்லப்படுகிறது. இதற்கு குர்ஆன் ஆயத்தையும் ஆதாரமாகக் காட்டப்படுகிறது. (அல் அஃராப் 96). (3) எல்லாவற்றையும் இறைவனுக்காகவே அர்ப்பணம் செய்து அவனுக்காகவே கடமைகளைச் செய்வது. ' ஏ! நம்பிக்கை கொண்டவர்காள்! இறைவனுக்காகவே உங்கள் கடமைகளைச் செய்யுங்கள்" குர்ஆன் (ஆல இம்ரான் : 102) "தக்வா" வைப் பெறுவதற்கு, அறிவு முக்கியமென்று, இவ்விரிவுரையாளர் கூறுகின்றார். ஏனெனில், தீமைகளிலிருந்துவிலகிக்கொள்ளவேண்டுமானல், ஒருவன் தீமையானது எது என்று தெரிந்து கொள்ளல் வேண்டும். இன்றேல் அவன் பாபத்திலிருந்து மீளமுடியாது.

மேற்கூறிய விரிவுரையிலிருந்து, எல்லா முஸ்லிம் அறிஞர்களும், " **தக்வா** " வை அடைவதற்கு அறிவு முக்கியமென்று சொல்லுகிறதாகத் தெரிகின்றோம். ஆகவே, முஸ்லிம்களின் கல்வியானது, ரசூலே கரீம் (ஸல்) அவர்களின் உபதேசப்படி, மனிதனை ஒரு சிறந்த கோட்பாட்டின்கீழ் கொண்டுவருகிறது. இந்தப் பரிசுத்த வாழ்க்கையானது, அவனை உலக பாசத்திலிருந்து விடுவித்து அவனை ஒரு படித்தரத்திலாக்கி இயற்கையை வெல்லச்செய்து, மனித வாழ்க்கையைப் பண்படுத்தத் தூண்டுகிறது. மேலும் இந்த முஸ்லிம் கல்வியானது, மாணவர்களை ஆயத்தப்படுத்தி, அவனுடைய சிரசையும், இருதயத்தையும் அழகுபெறச் செய்து, நபிமார்களைப்போலவும், ஆண்டவனுடைய நல்லடியார்களாக யிருந்து, இறைவனைப் பயந்து, எளிய வாழ்க்கை நடத்தி, நேரான வழியில் தங்கள் மனதைச்செலவிட்டவர்களை யாண்டு வந்த கலீபாக்களைப்போல், இந்த உலகில் வாழ்க்கை நடத்தவும் செய்கிறது. இந்த உலகில் எவர் சுதந்தரத்துடனும், சமத்துவத்துடனும் இருந்து, எவர் ஈமானுடன் இறந்தார்களோ, எவர் மரணத்துக்குப்பின் மனித வாழ்க்கையைத் தெரிந்துகொண்டார்களோ, அவர்களுக்கெல்லாம் இந்த **முஸ்லிம் கல்வியாளர்கள்** ஒரு தொடருள்ள மேன்மக்களாக இருக்கின்றார்கள். இப்னு ஸையத் அவர்கள் சொல்வதுபோல், ஹனபியாக்களுடைய பள்ளிக்கூடங்கள் மேற்கூறிய ஆத்மார்த்தீக நோக்கங்களுடன், மனித வாழ்க்கையைப் புனிதப்படுத்தவே ஏற்படுத்தப்பட்டன. மேலும் அவர் கூறுவதாவது :—"பேரின்பமான இந்நிலையை அடைவதற்கு அனுபவ சாத்தியமான மேற்கூறியவற்றை கடைப்பிடிக்க வேண்டும். இதுதான் ஒரே வழி. தீங்கான வழிகளைத் தள்ளிவிடவும், இறைவன் மீது நம்பிக்கை வைக்கவும், இது உதவுகிறது." இத்திட்டத்திலிருந்து; ஒருவனுக்கு மன எண்ணமும், திடகாத்திரமும்தேவை என்று உறுதிப்படுகிறது. மனிதனுடைய செயலற்ற தன்மையிலிருந்து அவன் விழிக்கவேண்டுமானல், சரியான வாழ்க்கையைக் காண்பிக்க அவனுக்குக் கற்பிக்கவேண்டும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் திருவாக்கியங்களிலிருந்து மேற்படி விஷயங்களை அடையலாமென்பது இப்னுஸையித் அவர்களின் கருத்தாகும். இதைப்பற்றி சர் நூஜி பின் வருமாறு எழுதுகிறார் :— " மாணவர்கள். காரணத்தின்மீதுதான் இறைவன்மீது நம்பிக்கை கொள்ளவேண்டும்; மூடத்தனமாக நம்புவது சரியல்ல; மூடத்தனமாக நம்புவது என்னுடைய நோக்கமல்ல; மூடத்தனமாக நம்பிக்கை வைக்கவேண்டுமென்பதை எங்கள் பாடசாலை சம்பந்தப்பட்டவரை ஒரு பாப காரியமாகவே கருதப்படும்." (அபூஹனீபா).

இந்த விஷயத்திலிருந்து, மனிதனுக்கும் இறைவனுக்கும் மத்தியில் ஐக்கியம் ஏற்பட ஹனபியாக்களுடைய போதனைகள், எவ்வளவு சிறந்ததாக இருக்கின்றனவென்பதை அறிந்துகொள்ளலாம். ஹஜ்ரத் இமாம் அபூஹனீபா அவர்களின் ஜீவிய காலத்திலேயே இதற்கு எதிரான அபிப்பிராயங்கள் கிளம்பின. "அல்ஆலிம்-வல்-முத அல்லிம்" என்ற சிறிய நூலில் இதற்கு இமாம் அவர்களால் பதில் எழுதப்பட்டது. " ஸஹாபாக்களுடைய காலத்தில் இல்லாத இந்த அபிப்பிராய பேதமுள்ள விஷயங்களை என் கிளப்பவேண்டு"மென்று, "அல்-ஆலிம்-வல்-முதஅல்லிம்" என்ற நூலைப் படித்த ஒரு மாணவர், ஹஜ்ரத் இமாத் அபூ ஹனீபா அவர்களைக் கேட்டார். அதற்கு இமாம் அவர்கள் கூறியதாவது :— " ரசூலே கரீம் (ஸல்) அவர்களுடைய ஸஹாபாக்கள் இம்மாதிரி விஷயங்களைத் தெரிந்துகொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கவில்லை, ஏனெனில், அக்கால முஸ்லிம்கள் இஸ்லாத்தின் கற்பனையில் குற்றங் கண்டுபிடிக்கவுமில்லை, முஸ்லிம்களை சிதைக்கவுமில்லை. ஆனல், இப்போதுள்ள முஸ்லிம்கள் அப்படியல்ல. தவறானதையும் சரியானதையும் தெரிந்துகொள்ளக்கடமைப் பட்டிருக்கிறார்கள். அப்படித் தெரிந்து தங்கள் மதத்தையும், தங்களையும் காப்பாற்ற வேண்டியவர்களாகயிருக்கின்றார்கள். ஆனல் ஸஹாபாக்களுக்கோ எதிரிகள் இல்லை; அவர்களை எதிர்க்க ஆயுதங்களும் தேவைப்படாது. முஸ்லிம்களுக்கு விரோதிகளிருந்தால், அவர்களைஎதிர்க்க ஆயுதங்களும்வேண்டும். ஆகவே எவன், இஸ்லாத்தைப்பற்றி தெளிவுபடுத்தாமலும் அக்கரை கொள்ளாமலும் இருக்கின்றானே? அவனை இவ்விவாதங்கள் இழுக்கின்றன. அப்படிச் செய்கிறவர்களுக்கு மனோசக்தி வேண்டும்; இல்லாவிட்டால் அது பிழையாக முடியும். எந்த ஒரு முஸ்லிமாவது, மனதால் ஈமான் கொள்ளாமல், உதட்டாலும், நாவாலும், ஈமான் கொண்டிருப்பானாயின் அவன் முஸ்லிமல்ல. மேலும் எவன் தன்னுடைய ஈமானைப்பற்றி வெளிப்படையாகச் சொல்லாமல் இருக்கின்றானே, அவன் அல்லாஹ் இடத்தில் உண்மையான முஸ்லிமாக யிருக்கின்றான்."

இந்த விஷயங்கள், இமாம் அபூ ஹனீபா அவர்கள் காலத்தில், சிலருக்கு மிகவும் கோபாக்கினியை உண்டாக்கின. பிறகு இப்னு-ஸீனு, ஸல்மான், இப்ஸால், ஹைஹ இப்னு எஃஸான், ஆகியோர்களின் ஒட்டலங்காரமான காவியங்களும் இதை ஆதரித்துள்ளன. இப்னு-துபைலின் ஒட்டலங்காரமான செய்யுட்கள், மனித வாழ்க்கையின் மனோதத்துவத்தன்மைகளைப்பற்றிக் கூறுகின்றன, ஹைஹ

இப்னு எஸ்ஃஸான் என்பவருடைய தாய் தகப்பன் யாரென்று தெரியாது. அவர் ஒருபொட்டலில் பிறந்தார்; ஒரு மானுல் வளர்க்கப்பட்டார், அவர் மிருகங்களுடன் பழகி வாழ்ந்து வந்தார். அவருடைய தோழர்கள் மிருகங்கள் தான். பறவை இனங்களின் பாஷைகளையும் விளங்கிக்கொண்டார். அப்படி யுள்ளவர், பிறகு தன்னுடைய அறிவால் தெய்வீகத்தன்மையை அறிந்துகொண்டார்.

அம்மாதிரியான தெய்வீகத் தன்மையை அறியும்படி செய்வதுதான், ஹனபீ பாடசாலைகளின் நோக்கமாக யிருந்தன. இம்மாதிரியான உயர்ந்த தத்துவங்களுக்கு செல்வாக்கு ஏற்பட்டு, இந்நோக்கங்கள், கீழ் நாடுகளிலும் மேல் நாடுகளிலும், முஸ்லிம் நாடுகளில் சில இடங்களிலும் பரவின.

ஆனுல், இமாம் ஷாபி அவர்களின் பாடசாலையும், அவர்களின் நோக்கங்களும் மேற்கூறிய கல்வி முறையில் வேறுபட்டிருந்தன. மார்க்கத்தின் மூலாதாரத்திலிருந்துதான் சங்கிலித்தொடர்போன்ற விஷயங்கள் போதிக்கப்பட்டன. இறைவனை நெருங்குவதுதான் **“கல்வி”** என்பது இப்னு ஜுமாவின் கருத்தாகும். (1) இறைவனின்தத்துவத்தை அவர்களின் மாணுக்கர்களுடைய மனதில் பதிய வைப்பதில், இப்பாடசாலையின் உபாத்தியாயர்கள் மிகவும் தீவிரமாகஇருந்தார்கள். மனிதனின் மனுேசக்திக்குரிய விஷயங்களைவிட நபிகள்நாயகம் (ஸல்) அவர்களின்போதனைகளைத்தழுவி தான்இறைவனை அடையவேண்டுமென்பது இந்தக்கல்விமான்களின் நோக்கமாகும். நபிமார்களின் போதனைகள் மனித அறிவிற்குப் பொருந்த வேண்டுமென்பதல்ல. ஆகவே இவர்கள், தத்துவார்த்தங்களுக் குரிய படிப்பையும், அறிவின் பிரமாணத்துக்குரிய (Dogamatic) படிப்பையும் விரும்பவில்லை. அபூ இப்ராஹீம் அத்—மஸ்னீயைக் குறித்து ஒரு விஷயம் சொல்லப்படுகிறது. அவர், இமாம் ஷாபி (ரஹ்) அவர்களுடன் ஞான விஷயங்களைப் பற்றித் தர்க்கம் செய்தார். அத் தர்க்கம் முடிந்த பிறகு, “குழந்தாய்! ஒரு விஷயம் உனக்குச் சொல்ல விரும்புகிறேன். சொல்லட்டுமா?” என்று இமாம் அவர்கள் அவரைப் பார்த்துச் சொன்னுர்கள். அதற்கு அவர் “சொல்லுங்கள்” என்ருர். “குழந்தாய்! நீ இந்த அறிவின் பிரமாணத்துக்குரிய விஷயங்களைச் சரியாகத் தெரிந்து கொண்டிருப்பாயாயின், உனக்குச் சன்மானம் ஒன்றுங் கிடையாது. ஆனுல் நீ அவைகளைத் தவருகப் படித்திருப்பாயாயின், நீ இறைவன் மீது நம்பிக்கையற்றவனுகப் போகின்ருய். ஆகவே, நீ என் சரியான ஞானத்தைப் படித்துக் கொள்ளக்கூடாது. அப்படித் தெரிந்து கொண்டால், அதற்குச் சன்மானமுண்டு; சரியாகத் தெரிந்து கொள்ளாவிட்டாலும் பாபமில்லை.” என்று இமாம் ஷாபி (ரஹ்) கூறினுர்கள். அப்படியானுல் அந்தப் படிப்பு எது என்று அல்—மஸ்னி இமாம் ஷாபி அவர்களிடம் கேட்டார். அது போழ்து இமாம் அவர்கள் கூறியதாவது:—**அதுதான் பிக்ஹு**. அதற்குப் பிறகு; அல்—மஸ்னி இமாம் ஷாபி அவர்களிடம், பிக்ஹு சம்பந்தமான விஷயங்களைப் பாடங் கேட்டார். இதைப் போலவே அபூத்தௌர் அவர்களும், முதலில் இமாம் அபூஹனீபா அவர்களைப் பின்பற்றி யிருந்ததுடன், ஒட்டலங்காரமாகக் கூறும் கடவுள் தன்மையினும் நம்பிக்கை வைத்திருந்தார். பிறகு இமாம் ஷாபியுடன் சேர்க்கை வைத்து, பிக்ஹு விஷயங்களைப் பாடங் கேட்டார்.

(இஹ்யாஉல் உலூம் வால்யூம் 1 பக்கம் 50 அல்வலீபதுல் காமிலா பக்கம் 20)

மேற்கூறிய ஷாபி இமாம் அவர்களின் கருத்தையும், ஷாபி மத்ஹபைத் தழுவிய சிலர் எதிர்த்தார்கள். இதற்கு விரோதமான கருத்துடன் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் முன் வந்து, எந்த விதமான விஷயங்களையும் படிப்பது தகுமென்று சொன்னதுடன், “வைதீகமான விஷயத்துக்கும், அதீதமான ஆத்மார்த்திக விஷயத்துக்கும் நடுவில் இருந்துகொண்டு விஷயங்களை ஆராய்வது” நல்லதென்று சொன்னுர்கள். டேவிட் ஹுமி என்பவரும் இதை ஆதரிக்கின்ருர்; என்ருலும், குருட்டுத் தனமாகக் கடவுள் மீது நம்பிக்கை வைப்பதை அவர் ஆதரிக்கவில்லை. இமாம் நவவி அவர்களும் இமாம் ஷாபி அவர்களின் கருத்துக்கு விரோதமாக இருந்ததுடன், “அறிவுப் பிரமாணத்துக்கு ஒத்த படிப்பை ஹராமென்று” இமாம் ஷாபி கூறியிருப்பதை மிகைப்படத் தக்க சொல்லென்றும் கூறுகின்ருர்கள்.

(தொடரும்)

---



# இஸ்லாத்தின் அரசியல் கொள்கை - 11

(MOULANA MAUDOODI)

## இஸ்லாமிய எஸ்டேட்டின் நோக்கம்

மேற் கண்ட முறைப்படி ஏற்படும் எஸ்டேட் அரசாங்கத்திற்கு, ஆண்டவன் ஒரு நோக்கத்தையும் ஏற்பாடு செய்துள்ளான். இதன் விவரம் குர்ஆனின் பல இடங்களில் விளக்கமாய் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக:—“மனிதர்கள் நீதத்தை கொண்டு நிலையாயிருப்பதற்காக நாம் நிச்சயமாகவே நமது தூதர்களை விளக்கமான அத்தாட்சிகளுடனும் வேதத்தையும் நேர்மையான நீதத்தையும் அவர்களுடன் நாம் இறக்கி வைத்தோம். மேலும் இரும்பை நாம் வெளியாக்கித் தந்தோம். அதில் பலமான சக்தியுண்டு. மேலும் மனிதர்களுக்கு (அதில்) அதிக பிரயோஜனங்களும் இருக்கின்றன.”

(அல்ஹதீத், குர்ஆன்)

ஆண்டவனின் இவ் வாக்கியத்தில் கூறப்பட்டிருக்கும் இரும்பின் அர்த்தமாவது அரசியல் சம்பந்தப்பட்ட சக்தியாகும். அன்றியும் இவ்வாக்கியத்தின் மூலமாய் அல்லாஹ் நபிமார்களான தூதர்களுக்குகூறுவதுமூலம் அவர்களுக்குக் காட்டியுள்ள நேரான உபதேசத்தின்படியும் நேரிய நீதத்தின்படியும் ஒழுங்கான வாழ்க்கை முறையை Well disciplined இதற்கு ஒப்ப கூட்டு நியாய நீதத்தையும் நிலை நிறுத்த வேண்டும் என்பதே. பிறிதோரிடத்தில் அல்லாஹ் கூறியிருப்பதாவது:—

“ஒரு சிலரான இவர்களுக்கு நாம் பூமியில் அதிகாரத்தை யளிப்போமாயின், அவர்கள் ஜக்காத்தை (ஏழைவரியை)யும் தொழுகையையும் உறுதியாய் நிலை நிறுத்துவார்கள். நன்மை(ச்செய்யும்படி) யும் ஏவுவர்; தீமையை விட்டும் (அப்பால் விலகும்படியும்) விலக்குவார்கள்.”

(அல்ஹஜ்-குர்ஆன்)

இன்னமும் ஒரு இடத்தில் அல்லாஹ் கூறுவதாவது:—“மனிதர்களுக்காகவெளிப்படுத்தப்பட்ட வர்க்கத்தாருள் நீவிர் மஹா சிறந்தவர்களாயிருக்கின்றீர்கள். (எப்படி எனின் நீங்கள்) நன்மையைக் கொண்டு ஏவுகின்றீர்கள். தீமையை விட்டும் (மக்களை) விலக்குகின்றீர்கள். அல்லாஹ்வின் மீது பரிபூரண நன்னம்பிக்கைக் கொண்டவர்களாகவும் திகழ்கின்றீர்கள்”

(ஆலெஇம்ரான்-குர்ஆன்)

குர்ஆனின் மேற்கண்ட வாக்கியங்களை கவனிப்பவர்கள் தெரிந்து கொள்ளும் விஷயமாவது: குர்ஆன் போதனை எடுத்துக் காட்டும் அரசியலின் நோக்கம், பறிப்பதும் இல்லாமற்செய்வதும் (NEGATIVE) அன்று. ஆனுல் அது தன்பால், கொடுப்பதும் உண்பேண்ணுவதுமான (POSITIVE) நோக்கத்தையே தன் முன்னே வைத்துக்கொண்டிருக்கிறது. மேலும் குர்ஆன் போதனை, ஒரு சாரார் மற்றொரு சாராரை யடக்கி ஆளக் கூடாதென்பதைக் கூறுவதுடன், மனிதர்களின் சுயேச்சையும் சுதந்திரமும் பாதுகாக்கப்பட வேண்டு மென்றும், ஒரு அரசாங்கம் மற்ற அரசாங்கத்தால் தாக்கப்படாமலிருக்க வேண்டு மென்றும் விரும்புகிறது. இது மட்டுமா? கூட்டு வாழ்க்கை முறையான சரியான சீர்திருத்த முறைகளை உலகின்பால் நிலவச் செய்ய வேண்டு மென்றும் விரும்புகிறது குர்ஆன். அன்றியும் அல்லாஹ்வின் துலக்கமான உபதேசங்களின்படி சர்வ சங்கடங்களையும் நிவர்த்திசெய்வதுடன் நன்மையான எல்லா காரியங்களையும் நிலைபெறச் செய்ய வேண்டு மென்றும் குர்ஆன் கருத்து கொண்டிருக்கிறது. இக் காரியங்களுக்கிடையே இடம் பொருள் ஏவல் இவைகளுக் கொப்ப அரசியல் சம்பந்தமான சக்திகளும் உபயோகிக்கப்படும்; அல்லாஹ்வின் உபதேசபிரசாரகைங்கரியமும் கவனிக்கப்படும். கல்வி பயிற்சி சம்பந்தமான வியவகாரங்களும்கவனத்துக்குரியனவாகும். இதற்கிடையே பொதுஜனங்களின் அபிப்பிராயமென்ன வென்பதும், அன்னரின் மனுேபான்மையின் காரணமாய் உண்டாகும் பலாபலன்கள் யாவை யென்பதும் நோக்கத்துடன் சேர்ந்தவைகளாகவே யிருந்து வரும்.

## சர்வ சக்தியுள்ள அரசாங்கம்

இம் முறையில் அமைக்கப்படும் அரசாங்கமானது, தனது கிரியையை ஒரு குறிப்பிட்ட அளவில் எல்லையில் மட்டும் செய்வதாயில்லை. ஆனுல், அதன் அதிகாரமானது சர்வ மக்களுக்கும் தேசத்திற்கும் பொதுவானதாக

வே அமைக்கப்பட்டதாய் நின்றிலங்கும். மேலும் இது, நாகரிகத்தின் சர்வ பிரிவுகளையும், கிளைகளையும் தனக்குள்ளடக்கிக்கொண்டு, சற்குண சம்பந்தமான சர்வ முறைகளையும் தனது திட்டத்தின்படி ஐக்கியப்படுத்திக் கொள்ள பெரிதும் விரும்புகிறது. எனவே, இதற்கெதிராய் எந்த ஒரு மனிதனும் தனிப்பட்ட முறையில் தன்னுடைய எக்காரியத்தையும் தனிப்பட்டதென்றோ தனக்குச் சொந்தமானதென்றோ சொல்லுவதற்கில்லை. இம்முறையில் இதைக்கவனிக்கும்போது, இவ்வரசாங்கமானது, ஒருவகையில் பாஸிஸ்ட் (யதேச்சையான) அதிகாரத்துக்கும், சமதர்ம ஆட்சிக்கும்ஒப்பானதாய்த்தென்படும். ஆனால் இதில் நுழைந்து பார்த்துச் செல்லுங்கால், குர்ஆனுடைய இவ்வரசாட்சியானதுபொது ஜன அதிகாரமாய் அமைந்திருப்பதுடன் தற்காலத்தில் காணப்படும் (TOTALITARIAN) ஏகாதிபத்தியஆட்சி போலவும், (AUTHORITARIAN) அதிகாரத்துவ ஆட்சி போலவுமான அரசாங்கமாயில்லை. இதில் தனிப்பட்ட மனிதனின் சுயேச்சை எவ்வகையாயினும் பறிக்கப்படுவதாயில்லை. அன்றியும் இதில் தனிமையான சர்வாதிகாரமென்பதையும் நீங்கள் கண்டு கொள்வதும் முடியாது. அரசாங்க இவ்விஷயத்தில் இஸ்லாம் ஏற்பாடு செய்திருக்கும் ஏற்பாடுகளையும், சத்தியத்துக்கும் அசத்தியத்துக்கு மிடையே ஏற்பாடு செய்திருக்கும் நுண்ணியமான வரம்புகளையும்உற்றுணர்ந்து கவனிக்கும் உண்மையான மனிதர்களின் மனங்களானது, 'இத்தகைய நேர்மையான தத்துவங்களைத் தன்னகத்தே அமைத்துக் கொண்டிருக்கும் திட்டங்களெல்லாம், சர்வ ஞானியும் தத்துவம் நிரம்பியவனுமான அல்லாஹ்விஞல் தான் ஏற்பாடு செய்யப்பட்டிருக்க முடியும் என்று ஐயமின்றி கூறிக் கொண்டிருக்கு மென்பது திண்ணம்.

### கூட்டு, நடைமுறை அரசாங்கம்

இரண்டாவதாக இஸ்லாமியஎஸ்டேட்டின் திட்டங்களையும் இதன் கருத்துக்களையும், இதன் சீர் திருத்த முறைகளையும் நன்கு கவனித்துப் பார்க்குமிடத்து, இத் தன்மைத்தாய அரசாங்கத்தை யாரால் நடாத்திச் செல்ல முடியுமெனின், அவர்கள் இத் திட்டத்தின் மீது பரிபூரண நன்னம்பிக்கை கொண்டவர்களாயிருத்தல் வேண்டும்; மேலும் இக் கருத்தை வேதங்கள் வாழ்க்கையின் கருத்தாய்க் கொண்டவர்களாயிருக்க வேண்டும். மேலும் இஸ்லாத்தின் சீர்திருத்த முறைகளைப் பூர்ணமாய் ஏற்றுக் கொள்ளுகிறோம் என்று மட்டில் சொன்னால் போதாது; பரிபூர்ண நம்பிக்கை வைத்துக் கொண்டாலும் போதாது; ஆனால் இந்த இஸ்லாமிய அதிகாரத்தின் அந்தரங்க தாத்பரியமென்னவென்பதையும் இப்படியே இதன் விபரமான விளக்கங்களென்னவென்பதையும் உணர்ந்தவர்களாயிருக்கவேண்டும். அரசாங்க இவ்விஷயத்தில் இஸ்லாம், தேசத்தையோ, நிறத்தையோ, பாஷையையோ நிபந்தனையாய் வைக்க வில்லை. ஆனால் இஸ்லாம் தனது சட்டதிட்டத்தையும், நோக்கத்தையும், சீர்திருத்த முறையையும் உலகத்தின் எல்லாமக்களுக்கும் எதிரே எடுத்துக் காண்பிக்கிறது. இதை ஏற்றுக் கொள்ளும் மனிதன், அவன் எந்த வம்சத்தைச் சார்ந்தவனாயிருப்பினும் அவன் இவ் வரசாங்கத்தை நடாத்தும் அங்கத்தைச் சேர்ந்தவனாய்ச் சமையலாம், இஸ்லாம் எடுத்துக் காட்டும் சட்டத்தையும் நோக்கத்தையும் முறையையும் ஏற்றுக் கொள்ளாதவன், இஸ்லாமிய அரசாங்கத்தில் சம்பந்தம் பெற இலாயக்கில்லாதவனாய் நிற்கிறான். ஆனால் இத்தகைய மனோபான்மை கொண்ட மக்கள் இஸ்லாமிய அரசாங்கத்தின் எல்லையில் ஒரு பாகமாய் (SUBJECT) வாழ்ந்து வரலாம். இவர்களுக்காக இஸ்லாத்தின் சட்டத்தில், குறிப்பிட்ட ஒரு சில பாத்யதைகளும் சலுகைகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. இத்தகையோரின் உடல், பொருள், ஆவி, கவுரவம், கண்ணியம்யாவும் பரிபூர்ணமாய் கவனித்துப் பாதுகாக்கப்படும். இன்னார் ஏதேனும் ஊழியம் செய்யஇலாயக்குள்ளவர்களாயிருப்பார்களாயின், அவர்கள் பாலிருந்து ஊதியத்துடன் ஊழியம் பெற்றுக் கொள்ளப்படும். இஃதெங்ஙனமாயினும், இவர்கள் இஸ்லாமிய அரசாங்கத்தின் அங்கத்தவர்கள் மட்டும் சமைதல் சாலாது. என்னெனின், இவ்வரசாங்கமானது குறிப்பிட்ட ஒருவழியைக் கடைப்பிடித்து நடக்கும் ஒரு கூட்டத்தாரைச் சார்ந்ததாகும்.

எனவே, இங்கும் இஸ்லாமிய அரசாங்கமானது, கம்யூனிஸ்ட் எஸ்டேட்டைப் போலவே தென்படும். ஆனால் இதர முறைகளில் நம்பிக்கை வைக்கும் மக்களுடன் சமதர்மவாதிகள் அதிகாரத்தை உபயோகிப்பதுபோல் இஸ்லாம் உபயோகிப்பதில்லை. கம்யூனிஸ்ட் ஆட்சியார்கையாளும் முறை இஸ்லாமிய சட்டத்திலில்லை. அஃதாவது, அந்நியர்கள் மீது தங்கள் ஆட்சியும், அதிகாரமும் கம்யூனிஸ்ட் பார்ட்டியார் பெற்றுக் கொள்வார்களாயின், அவர்கள் மீது தங்கள் கொள்கைகளையும் நாகரிக முறைகளையும் கட்டாயப்படுத்தி ஒப்புக் கொள்ளச் செய்கின்றனர். அந்நியர்களின் சொத்துக்களெல்லாம் பறிமுதல் செய்யப்படுகின்றன. கொலைகளின் காரணமாய் இரத்தம் வெள்ளப் பெருக் கெடுக்கின்றது. ஆயிரக் கணக்கான ஏன் இலட்சக்கணக்கான மக்கள் பிடிக்கப்பட்டு உலக நரகமான ஸைபீரியாவுக்குக் கொண்டு செல்லப்படுகின்றனர். ஆனால், இஸ்லாமிய அரசாங்கமானது முஸ்லிமல்லாத மக்களுக்கு (பிரஜைகளுக்கு) தனது ஆட்சியில் தாராளமாய் அவர்களுக்கு உரிமைக் கொடுத்திருக்கிறது. இது சம்பந்தமான நியாயம் அநியாயத்திலும் நடந்து செல்லும் நேரான பாதையிலும் எவ்வளவுதூரம் நேர்மையான வரம்பை அமைத்திருக்கிறது என்பதையும் சற்று நிதானமாய் கவனித்துப் பார்ப்பவர்கள், அல்லாஹ்வின் சார்பாய் உண்டான சட்டங்களும் அரசியல் முறையும் எப்படி யிருக்கிற தென்றும், மனிதர்கள் தங்களிஷ்டப்படி நிர்மாணம் செய்யும் அரசியல் முறை எங்ஙனமுள வென்றும் எளிதில் உணர்ந்துகொள்வர்.

---

# சரித்திரத்தில் வகுப்புவாதம்

(மௌலானா ஸையித் ஸுலைமான் நத்வீ)

இந்தியாவின் பண்டைய ஆட்சிகளைப் பற்றி இயம்புதலே சரித்திரமாம். அநேக ஆராய்ச்சியாளர்கள் பண்டைய சரித்திரத்தை வரைந்துள்ளனர். இவ்வாறு வெளிவந்துலவும் நூற்கள் அநந்தம். பொதுவாக இவைகள் வரையப்படுங்கால் ஒரே ஒரு விஷயமே குறிக்கோளாக அமைந்துள்ளது. இக் குறிக்கோள் முழுமையும் தீமைகள் திணிந்தது. இதனை இதுகாறும் எந்த கழகமும் மறுக்கவே இல்லை. நான் இங்கு வகுப்புவாத மனப் பான்மையையே குறிக்கின்றேன். சரித்திரப் புத்தகங்கள் வரையப்படுங்கால் வகுப்புவாத மனோபான்மையே கையாளப் படுகிறது. சரித்திர ஆராய்ச்சி என்பதே ஒரு தனிக் கலை. இது அரசியலுக்கு அப்பாற்பட்டது. எனினும், இதில் அரசியல் பலவந்தமாகத் திணிக்கப்பெறுகின்றது. இதனால் ஏற்படும் விபரீத விளைவுகள் பல. இந் நாட்டில் வதியும் பல்வேறு சமூகங்களிடையே இதனால் வேறுபாடுகள் தோன்றியுள்ளன.

இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சிநடைபெற்ற அக்காலை, முஸ்லிம் மன்னர்கள் எத்தனையோ நேரிய முறையில் அரசு நடத்தி வந்துள்ளனர். இதற்கு ஏராளமான சான்றுகள் திரட்டப்படல் சாலும். ஆனால், முஸ்லிம் ஆட்சி வீழ்ந்தபின், இந் நாட்டை ஆதிக்கங் கொண்ட வர்க்கத்தார், தங்கள் பெருமைகளை மேன்மைபடுத்திக் கூறிக் கொள்வதற்காக சில அவ கேடான முறைகளைக் கையாண்டனர். அன்னோர் தங்களுக்கு முன் அரசு நடாத்தியவர்களின் திறனைக் குறைத்து கூறியும், சில நற்செயல்களைத் தீச்செயல்களெனத் திரித்தும் வரைந்துவிட்டனர். இதற்குப்பின் அயல்நாட்டினரால் நிர்வகிக்கப் பட்டு வந்த இந்தியக் கல்வி இலாக்காவும் மேற்கூறிய செயல்களுக்காகப் பயன்படுத்தப்பட்டது. தற்போதைய ஆட்சி முறையை மிகைத்த புகழுடையதாகக் காண்பிப்பதற்காகச் சரித்திர புத்தகங்களில் பண்டைய ஆட்சி முறைகளைப் பற்றி பயங்கர வர்ணனைகள் தீட்டப்பட்டுள்ளன. இந்திய சரித்திரப் பாடப் புத்தகங்கள் ஒரே கதையை பல பல வகைகளாகக் கூறுகின்றன. இதனால் இளைஞர்களின் உள்ளங்களில் வேற்றுமை விரோதங்கள் தோன்றி விடுகின்றன. இந்த விரோதமே நம் தினசரி வாழ்வில் ஒருவருக்கொருவர் வேறுபட காரணமாய் சமைந்துவிடுகிறது.

கடந்த மகா யுத்தத்துக்குப் பின் கல்வி இலாக்கா, நம் நாட்டினரின் மேற்பார்வையில்தான் இருந்து வருகிறது. இந்திய சரித்திரம் நம் நாட்டினராலேயே போதிக்கப்படுகிறது. இவர்களே பல்வேறு சரித்திரப் பாட புத்தகங்களையும் இயற்றுகின்றனர். பல்வேறு கால மன்னர்களின் வீரம், வெற்றி முதலியவைபற்றிய ஆராய்ச்சிகளைச் செய்பவர்களும் இவர்களே. ஆனால், இவர்கள், தங்களுக்குமுன் இந்திய சரித்திராசிரியர்களாயிருந்த அந்நியர்கள் சென்ற வழியே பின்பற்றுவதைக் கண்டு நான் வருந்துகிறேன். ஆதலின் இன்றைய அவசியத் தேவை இதுதான். சரித்திர ஆராய்ச்சி, வெளியீடு, போதனை முதலியவைகளில் பண்டைய முறையைப் பின்பற்றக்கூடாது; நேர்நடுநிலை நிற்க வேண்டும் சரித்திர ஆசிரியர் என்போர்.

சரித்திரச் சம்பவங்கள் கச்சாப் பொருள்கள் போன்றவை. இவைகளை எந்த உருவாக வேனும் சமைத்துவிடலாம். ஒரே சம்பவத்தை ஒருவர் ஒருவகையில் கூறுவர்; எதிர் தரப்பினர் மாறிக் கூறுவர்; மூன்றுமவர் பின்னொரு வகையிற் செப்புவர். இது உலக இயல். உதாரணம் காட்டவேண்டுமாயின், கடந்தமகாயுத்த சரித்திரமே போதும். அன்று, போரிட்ட கட்சியார், தம் தம் மனோபான்மைப்படியே மகாயுத்தத்தை வரிவடிவாக்கிவிட்டனர்.

பல இனமக்களை ஒன்று சேர்க்கவோ, அன்றி பிரித்து விடவோ சரித்திரத்திற்கு சக்திஉண்டு. ஆதலால், இந்திய சரித்திராசிரியர்களை நான் கோருவதெல்லாம் இதுவே, நீங்கள்உங்கள் புயங்கள் மீது சார்ந்து நிற்கும் பொறுப்புக்களை யுணரவேண்டும். உங்கள் நாட்டின் எதிர்காலத்தைப் பிரகாசிக்கச் செய்யவோ, அன்றி இருளாக்கி விடவோ உங்களால் முடியும். பழங்காலக் கதைகளை மீண்டும் மீண்டும் பழைய போக்கில் கூறிக்கொண்டே நம்மிடையே வேறுபாட்டை ஏற்படுத்திக் கொள்ள அடிகோலினால் நம்மை நாமே வஞ்சித்துக் கொண்டவர்களாகிவிடுவோம்.



நாம் பின்பற்றக்கூடிய இரண்டு முஸ்லிம் எழுத்தாளர்கள் முன்னர் இருந்தனர். அவர்களில் ஒருவர் துருக்கிய வமிசத்திலுதித்தவர்; ஆனால் இந்தியாவின் மீது அவருக்கு அளப்பரிய அன்பும், பற்றும் உண்டு. அவரது பெயர் அமீர் குஸ்ரோ. மற்றொருவர் மீர் குலாம் அலி ஆஜாத் பில்கிராமீ. இன்னார் ஒரு பெரிய முஸ்லிம் சரித்திராசிரியர். இவரைக் காட்டினும் மகத்தான அரபிப் புலவரும், சரித்திராசிரியரும் இந்தியாவில் இதுகாறும் தோன்றியதே கிடையாது. இன்னார் ஹிந்தி மொழியிலும் கவிதைகள் இசைக்க வல்லார். இவருடைய வமிசமே ஹிந்திக் கவிஞர்களடங்கியது.

கி.பி. 1206 முதல் 1526 வரையுள்ள இடைக்கால சரித்திரம் பற்றி இந்திய ஆராய்ச்சியுள்ள சரித்திர வல்லார் பலர் பல சரித்திர புத்தகங்கள் வரைந்துள்ளனர். இந்த காலத்திய சரித்திர சம்பவங்களை விரித்தெழுதிய பல பல்கலைக் கழகப் போதகாசிரியர்களுக்கு நம் மனமுவந்த நன்றி உரியதாகுக. ஆனால், இச் சரித்திராசிரியர்களில் பெரும்பாலோர், பல்கலைக் கழகப் பட்டத்தை விரும்பியே இச் சரித்திரங்களை வரைந்துள்ளனர். இவர்களனைவரும் ஒரு குறிப்பிட்ட கால வரம்பிற்குள் சரித்திர சம்பவங்களைத் திரட்டி வரையவேண்டியிருத்தலால், தங்களுக்குத் தெரிந்த ஆதாரங்களையே ஆராய்ந்து கொள்ளுகின்றனர். ஆதலின், அவர்களின் சரித்திரங்களில் அவசர முடிவுகள் அமைந்துவிடுகின்றன. சில ஆசிரியர்கட்கு பாரஸீக மொழி தெரியாது. அவர்கள் இதரர்களின் உதவியை நாடி தங்கள் போக்கில் சரித்திரத்தை வரைந்து விடுகின்றனர், சில ஆசிரியர்களுக்கு முஸ்லிம் மன்னர்களின் மதத்தத்துவங்கள் தெரியா. அவர்கள், இதரர்களின் கூற்றுகளைக் கையாண்டு, ஆதாரங் காட்டி வரைந்திடுகின்றனர். இவ்வாறு தாறுமாறான முறையில் வரையப்படும் சரித்திரங்களால், வாசகர்களிடையே வெறுப்பும், வேறுபாடுகளும் தோன்றி விடுகின்றன.

சரித்திராசிரியர்களெல்லாம் ஒரு முக்கிய விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டுமென்று நான் கோருகிறேன். பண்டைய (மத்தியகால) இஸ்லாமிய மன்னர்களனைவரும் பெயரளவான முஸ்லிம் மன்னர்களே. எனினும், அவர்களின் நிர்வாக முறைகள் இஸ்லாமியத் தத்துவங்களைச் சார்ந்தனவல்ல. உண்மையைக் கூறுமிடத்து அன்னோரனைவரும் இஸ்லாத்தைத் தழுவிய துருக்கியராகவோ, பட்டாணியர்களாகவோ, ஹிந்துக்களாகவோ இருந்தனர். அம் மன்னர்கள் ஒன்று அல்லது பல தலைமுறைகளாக முஸ்லிம்களாயிருந்ததால், இஸ்லாத்தின் முறையைக் கண்டிப்பான முறையில் பின்பற்றியவர்களாயில்லை. இஸ்லாமிய மன்னர்கள் இஸ்லாத்தின் அரசியல் கொள்கைப்படி நாட்டை நிர்வகிக்க முயற்சிக்கவில்லை. மேலும், அவர்களிடமிருந்து இராணுவத் தளபதிகளும், தங்களிடம் பிடிபட்ட எதிரிகளை நடத்துவதில் இஸ்லாமியத் தத்துவங்களைக் கையாளவில்லை.

துருக்கிய முஸ்லிம் மன்னர்கள், இந்தியாவில் யுத்தங்களை நடாத்திய காலை இஸ்லாமிய யுத்த—சமாதான, வெற்றி—தோல்வி வரவு செலவு முதலிய தத்துவங்களை அனுஷ்டியாதுபோய் விட்டனரெனக் கூறுதற்கு வருந்த வேண்டியிருக்கிறது. தோல்வியுற்றோருடன் ஒப்பந்தப் பூர்வ சமாதானத்துடன் வாழ வேண்டுமென இஸ்லாம் தெளிவாகப் போதிக்கிறது. ஆனால் பண்டைய முஸ்லிம் மன்னர்கள் இஸ்லாம் மதத்தினரென்ற ஒரே காரணத்தால், அவர்கள் ஷரீஅத் சட்டப்படி நடந்தனரென்று சரித்திராசிரியர்கள் வரைந்துவிட்டனர். இந்த வகையில் சில ஆசிரியர்கள், முஸ்லிம் மன்னர்களை, இஸ்லாத்தின் இலட்சியத்துடன் பிணைத்து வரைந்துள்ளனர். வேறு சிலர் அதை மறுத்து, முஸ்லிம் மன்னர்கள் நேரிய முறையில் நடந்து கொண்டவரென வரைந்து வைத்துள்ளனர். சரித்திரத்தைப் பற்றிய விமர்சனங்கள் பட்சபாதமற்ற மனதுடன் வரையப்பட வேண்டும். ஒரு மன்னனின் நற்குணங்களும், புகழுக்குரிய செயல்களும் கொஞ்சமும் குறைக்கப்படாமல் வரையப்படவேண்டும்; ஆனால் அம் மன்னனின் கொடுஞ் செயல்கள் மட்டும் அப்படியே அகற்றிவிடப்படவேண்டும்.

முஸ்லிம் மன்னர்களின் வாழ்க்கைபற்றி வரையப் புகும் சரித்திர வல்லார் ஒரு விஷயத்தைத் தெளிவுபட ஞாபகத்திலிருத்த வேண்டும். முஸ்லிம் முன்னர்கள் முஸ்லிம்கள் ஆன மன்னர்களே யன்றி அவர்கள் இஸ்லாம் மதத் தலைவர்களல்லர். ஆதலால், தவறுகள் எதும் இழைக்காமல் அவர்கள் அரசு நடாத்திவிருப்பரென நிச்சயமாகக் கூறி விடமுடியாது. அம் மன்னர்கள் ஏதேனும் அரசியல் தவறுகள் இழைத்திருப்பினும், நேர்மையற்ற முறையைப் பின்பற்றியிருப்பினும் அவர்கள் சார்பில் நாம் மன்னிப்புக் கோரவோ, அன்றி அவர்களின் செயலுக்காக நாம் வெட்கமுறவோ வேண்டுவதில்லை. உலகில் எந்த இனத்தவரும் தங்

கள் மன்னர்களனைவரும் நேரியவர்களென்றோ நெறி முறை தவறாதவர்களென்றோ பெருமை பாராட்டிக் கொள்ள முடியாது. ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு காலத்திலும் நல்ல அரசர்களும் கெட்ட அரசர்களும் இருந்தே வந்திருக்கின்றனர். ஆதலால் ஒரு மன்னனின் தனிப்பட்ட தீச்செயலுக்காக அவனுடைய மதத்தினைப் பற்றி இழிமொழிகளை கூறுதல் தவறும். இவ்வகையான இழிமொழிகளும் கண்டனங்களும், பண்டைய இந்திய ஹிந்துக்கள் ஆட்சியைப் பற்றியும், நவீன இந்திய கிறிஸ்தவ ஆட்சியைப்பற்றியும் வரையப்பட்டுள்ள சரித்திரங்களில் விலக்கப்பட்டுள்ளன. இது நன்மையான செயலே. யாதேனுமொரு குறிப்பிட்ட விஷயத்தைப் பிரசாரம் செய்வதற்காக சரித்திரத்தை ஒரு கருவியாகச் செய்துவிடக்கூடாது. சரித்திரம் என்பது சம்பவங்கள் நிரம்பிய ஒரு கதை. இதில் தவறுகள் மேற்போக்காகவும், நற்செயல்கள் விரிவாகவும் வரையப்படுதல் அவசியம்.

இங்கிலாந்தின் சரித்திரத்தில்யுத்தங்களும், கலகங்களும் மலிந்து நடைபெற்றதில்லையா? அங்கு வதியும் பல இன மக்கள், பண்டைய ரோமர் காலமுதல் இன்றைய ஆங்கிலோ—ஸாக்ஸன் ஆட்சிநாள் வரை எவ்வித உட்குழப்பமும், பிளவுகளும், சச்சரவுகளும் இல்லாமல் நிம்மதியாகவே வாழ்ந்து வந்திருக்கின்றனரா? ஸ்காட்லண்டு, வேல்ஸ், அயர்லாந்து, இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கிடையே இரத்தப் பெருக்கான போராட்டங்கள் ஏற்படவில்லையா? இந்த சரித்திர சம்பவங்கள் எல்லாம் இங்கிலாந்து சரித்திரத்தில் மேற்போக்காகவே விவரிக்கப்பட்டுள்ளன.

இங்கிலாந்து சரித்திரத்தைப் போனறே பண்டைய இந்திய சரித்திரமும் இந்தியாவின் பலப்பல பகுதிகளில் நடைபெற்ற முக்கியாம்ஸமற்ற யுத்தங்கள் அடங்கிய கதையாகும். புத்தர்கள், ஜைனர்கள், பிராம்மணர்கள், ஆரியர்கள், சைத்திரியர்கள், மற்றுமுள்ள பண்டைய இந்திய மக்களனைவரும் அரசியல் வேறுபாடுகளுடன் மத வேறுபாடுகளுமுடையவர்களாகவே வாழ்ந்தனர். ஆனால், நவீன சரித்திராசிரியர்களெல்லாம் இந்த விஷயங்கள் பற்றி விமரிசனம் செய்து தங்கள் காலத்தை வீணுக்குவதில்லை. இது புகழுக்குரிய செயல் தானென்பதில் சந்தேகமில்லை. ஆனல், அதே சகிப்புத்தன்மையும், மேற்போக்கான மனப்பான்மையும் இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சி பற்றிய சரித்திரம் வரையப்படும் போதும் கையாளப்படவேண்டும்.

[கடந்த 30-12-44ல் சென்னையில் நடைபெற்ற அ.இ. சரித்திர காங்கிரஸ் 7-வது மாநாட்டில்செய்தசொற்பொழிவின் பகுதிகள்.]





# உய்விக்கவந்த உத்தமி

(ஸ்ரீவை. C. மீரான்)



எங்கும் மணல் மேடு. எப்புறமும் தீப்பொறி. வறண்ட காற்று வாரி வீசும் வேகத்தில் மணற் குன்றுகளை இடம் விட்டு இடம் மாற்றி யமைக்கிறது. ஆதார மின்றி ஆகாயத்தில் தொங்கும் மேகக் கூட்டங்களின் சாயை நிழல் போல காட்சி யளிப்பதும் மறு நிமிடம் மாறி விடுவதுமாயிருக்கிறது. பத்தடி தள்ளி தண்ணீர் தேக்கம் தென்படும். பக்கத்தில் சென்று பார்த்தால் பரந்த மணல் வெளிதான்! இன்னும் பத்தடி தள்ளி இருப்பதாக தோற்றம்—அங்கும் இதே ஏமாற்றம்—பெயருக்கு ஒரு துளி தண்ணீருண்டா? பரந்த மணலிலாவது ஈரப்பசை யுண்டா? வானமும் பூமியும் பற்றி எரிவதுபோல அனல் பரக்கிறது.

இன்னும் கொஞ்சம் எட்டிப் போவோம். வெள்ளியைப் பரத்தினாற்போன்ற மணற்பரப்பில் மரகதம் பதித்தாற்போல விட்டுவிட்டு முளைத்திருக்கும் பசும் புற்களை பார்த்ததும் அப்படியே மூக்கின்மேல் விரல்வைத்து விடுவோம். ஆனல் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. ஈரமில்லா நெஞ்சத்தில் கூட இயற்கையாக "கருணை" இடம் பெற்றிருக்கிறதென்பதை இறைவன் இயற்கை மூலமாகவே எடுத்துக் காட்டுகிறான்.

சிறிது தொலைவில் சிறிய குன்றும் நாலைந்து குண்டாங்கற்களும் உருண்டு வருவது போன்ற தோற்றம். உண்மையில் குன்றல்ல அதுதான் அக்கானகத்தில் வசிக்கும் "முரட்டு" மனிதர்களின் வாகனம் ஒட்டகம். மற்ற உருவங்கள்—அவர்கள் தான் அந்த காரத்தில் அமிழ்ந்து கிடக்கும் அப்பாலைவன அராபியர்கள். அப்பா! என்ன பயங்கரத் தோற்றம்—காமம், கொலை, களவு, முதலிய துர்க்கிருத்தியங்களுக்கு "நாங்கள் தான் பிரதிகள்" என்று கூறுவது போலிருக்கிறது அவர்கள் பார்வை. அணிந்திருக்கும் ஆடையோ; அவர்கள் எவ்வளவு கடின சித்த முடையவர்கள் என்பதற்கு அதுவே சாக்ஷி.

அத்தனையும் கடந்து வரும்பொழுது காண்கிறோம் கண் கொள்ளாக் காட்சியை. மாடமாளிகை கூட கோபுரமல்ல. விட்டு விட்டு அமைக்கப் பட்டிருக்கும் சிறு சிறு குடிசைகள். ஆங்காங்கே ஒரு சில கல் மண்டபங்கள். சுற்றிலும் ஒற்றை நாடிபோல ஓங்கி வளர்ந்திருக்கும் ஈத்தமரங்கள் ஆடி அசைந்து ஒன்றை ஒன்று தழுவிக் கொள்வது ஒப்பற்ற காதலர்களுக்கு கூட பொறாமையை மூட்டிவிடும். அது பூத்துக் குலுக்கும் புது மணத்திலே இந்தப் பொல்லாத கூட்டங்கூட புத்துணர்ச்சி பெறும் என்ற நம்பிக்கை ஏற்பட்டுவிடுகிறது.

நாலைந்து குடில்களைக் கடந்து சென்றதும் நம் கவனத்தை இழுக்கிறது சிறிய குடிசை ஒன்று. அது புதிதாக வேயப்பட்டிருக்கும் ஈந்தங் கீற்றின் பசுமையைப் பார்த்தால் குடிசையே பூமியிலிருந்து முளைத் தெழுந்தமாதிரி. இயற்கை நாயகனின் பார்வை அக்குடிசையின் மீது விழுந்திருக்கும்போது அது எப்படி செயற்கை குடிசையாக தோற்றமளிக்க முடியும். அதன் வாசலில் வளர்ந்து நிற்கும் மூன்றடி உயர முள்ள ஈத்த மரம் கொற்றவன் வாசலில் கொடி பிடித்து நிற்கும் கொத்தளக் காவற்காரன் போல.

"கிரீச்" என்ற சப்தம். தட்டிக் கதவை திரந்து அப்பொழுதுதான் வந்த அம்மாது எட்டிப் பறித்தாள் ஈத்தங்கனியை. பறித்த கனிகளை பத்திரமாக மடியில் கட்டிக்கொண்டாள். எட்டி எட்டிப் பறித்து இளைத்து விட்டதால் அப்படியே மரத்தடியில் அயர்ந்து உட்கார்ந்தாள்.

என்ன மென்மையான மேனி! முகத்தில் வீசும் அக் "காந்தி" உலகத்தையே ஒளிபெரச் செய்து விடும். தங்க நிற முகத்தில் முத்துப் போன்ற வியர்வைத் துளிகள் வைரம் பதித்தாப் போல. அந்த ஒளி பெற்ற முகத்தில் தயை, காருண்யம், அத்துடன் உலகம் போற்றப் பெறும் உத்தமரை உள்ளடக்கிக் கொண்டிருப்பதால் சிறிது கர்வமும் கூட. விம்மிப் பொருமிய மார்கள் "உலக மக்கள் அத்தனை பேருக்கும் நான் தாயகம் என்னும் இருமாப்பால் சற்று உயர்ந்தே நிற்கிறது. சொரண்டிக் காட்டிலே சூர்ய காந்தி பூத்தாப்போல இந்தக் காடு முரடான மனிதக் கூட்டத்தினூடே கற்புக்கரசி ஆமினு. அயர்ந்து அமர்ந்த அப் பூரணக் கர்ப்பிணிக்கு கன்னி மரம் காற்று வீசுகிறது. இம் மென்மையான மேனியை சுட்டெரிக்க மனமில்லாக் கதிரவன் மேற்கே போய் ஓடி ஒளிகிறான்.

களை தீர்ந்த மாது வீட்டினுள்ளே நுழைகிறாள். மடியிலுள்ள சிறிய பீத்தல் வழியாக

ஒரு ஈத்தங்கனி பிதுங்கி விழுகிறது. உலகாதிபதியின் பட்ட மகிஷியாய் வீற்றிருக்க சகல லக்ஷணங்களும் பொருந்திய மாதிடம் "வறுமை" ஒட்டிக் குடி இருக்கிறது போலும்.

பாதியிரவிருக்கும். மங்களகரமான வாடை கஸ்தூரி கமழுகிறது என்பார்களே அப்படி சலசல வென்ற காற்று. ஈத்தங்கீற்றுகள் ஒன்றோடொன்று உராய்ந்து கொள்ளும் 'சர்-சர்' என்ற சுருதி யுடனே தேனைப் பருக வருக வண்டினங்களின் ரீங்காரம். இது தெய்வத்தின் அருளால் இயற்கை இசைக்கும் இன்னிசை இத்தனைக்கும் ஊடே "குவ்வா குவ்வா" என்ற மதலையின் குரல் உங்களுலகில் நானும் ஒருவன் வந்துள்ளேன் என கொக்கரிக்கிறது. ஆம்! அதுவும் சாதாரணமாக இல்லை. உலக மமக்களே! உங்களை உய்விக்க வந்துள்ளேன் எனப் பகர்கிறது அந்த தீர்மான தொனி.

உலகம் விழித்துக் கொண்டது. அந்தகாரம் மறைந்தது. அஞ்ஞானம்ஒழிந்தது. வாழ்க்கைக்கு வழி காட்டும் உத்தமர் அவதரித்து விட்டார். அதை கண்டு களிக்க கதிரவனும் புறப்பட்டு விட்டான்.

இயற்கை எழில் பெற்ற இக் குடிசைக்கு வருவோரும் போவோரும் "அந்த" முரடர்கள் தான். ஆனால் இப்பொழுது அவர்கள் தோற்றம்!! ஒவ்வொரு வருடைய முகமும் மாறுதலடைகிறது. ரௌத்திரகரமான மூர்க்கத்தினோடே பக்தி பரவசமான ஆனந்தம். என்ன அழகு என்பர் சிலர்! என்ன சக்தி வாய்ந்த பார்வை என்பர் சிலர்!! என்ன இன்பமான "குறுநகை" என்பர் சிலர்!!! அத்தனை முரட்டு சுபாவிகளின் உள்ளத்திலும் ஆனந்த மயமான அக் குழந்தை இடம் பெற்றுள்ளது. அதன் "காந்தி" அத்தனை பேரையும் வசீகரித்து விட்டது.

ஓடோடியும் வந்தார் ஓர் கிழவர். ஆள் ஆஜானு பாகுதான். விசால முகம், அடர்த்தியான தாடி மயிர், அழகிய சிவந்த மேனி, காந்தி வீசும் கண்கள், கலகலப்பான தொனி.

அம்மா! ஆமீனா! எனக்கூறிக் கொண்டே உள்ளே நுழைந்தார். அத்தனைக் கூட்டமும் மரியாதையாக வழி விலகி நின்றது. குழந்தையை கையில் எடுத்தார். ஆனந்ததாண்டவமாடினார். ஆஹா! ஹா! ஆமீனா! நீயே பாக்கியவதி, பெற்றெடுத்தாய் உத்தமரை. இவர் இறைவனின் அருள் பெற்ற தூதர். உலகம் போற்றும் உத்தமர். இவருக்கு "முஹம்மது" தென நாமம் சூட்டுங்கள் எனக்கூறிக் குதித்தார்.

உய்விக்க வந்த உத்தமர் வாழ்க! எம்மான் வாழ்க!! முஹம்மது(ஸல்) வாழ்க!!! என வானளாவக் கூவினர் அந்த பித்தம் தெளியப் பெற்ற அரபிகள்.

அல்லாஹு அக்பர்......என்னும் தொனி கேட்டுத் திடுக்கிட்டேன். அப்பொழுதுதான் பொருத்தப்பட்ட காந்த விளக்கும் "பளிச்" சென்று பிரகாசித்தது. அறையில் சூழ்ந்திருந்த அந்தகாரம் ஒழிந்தது. மீண்டும் அல்லாஹு அக்பர்......என்ற கீதம்கேட்டுஉணர்வு பெற்றேன். மஃரிபு நேரம் ஆகி விட்டதை அறிந்து பள்ளிக்குப் போக ஆயத்தமானேன். அங்கு வந்த என் தங்கை நயீமா "என்ன அண்ணேன் கதை எழுதிவிட்டீர்களா" என்றாள். அப்பொழுது தான் நான் கதை எழுத உட்கார்ந்ததும் சக்கர மில்லா மனோரதத்தில் கால்களில்லா கற்பனைக் குதிரைப் பூட்டி கடந்துபோன ஆயிரத்தி நானூறு வருடங்களுக்கு முன் வரை பிரயாணம் செய்ததும் நினைவுக்குவந்தது. அப்பிரயாணத்தில் கண்ட காட்சி தான் மேலுள்ளது.

---





# பாக்கிஸ்தானை பலாத்காரத்தினாலாவது பெற்றே தீருவோம்

("குலாம்")

(சென்ற இதழில் 'ரைட் ஹானரபிள் ஸாஸ்திரியாருக்கு—'என்ற தலையங்கத்தின் கீழ் வந்ததன் தொடர்பு.)

'கிழக்கும் மேற்கும் சந்திக்காது' எனக்கு இஸ்லாத்தினால் பொய்படுத்தப்பட்டு போனாலும் ஹிந்துவும் முஸ்லிமும், ஹிந்து முஸ்லிமாக மாறும் வரையில், சந்திக்க, ஒன்றித்துப் போகமுடியாது என்பதைக் கண்டோம். இதுவரையில்.

இப்பொழுது ஹிந்து ஹிந்துவாக விருந்து கொண்டே முஸ்லிம்களை நயபயத்தால் அடிமைகொண்டு பாகிஸ்தான் கைகூடாதபடி செய்யமுடியாது; முஸ்லிம்கள் அவர்கள் முஸ்லிம்கள் என்ற காரணத்தால், தங்கள் உரிமையை, தனியிடத்தை, பரிசுத்தமான இடத்தை, அதாவது பாங்கான ஸ்தானத்தை, இந்துஸ்தானத்திலிருந்து, அதாவது அசுத்தமான இடத்திலிருந்து, பலாத்காரத்தை உபயோகித்தாவது பிரித்துப் பெறத்தான்போகின்றனர் என்று முதல் கட்டுரையில் கண்டிருந்தேன். அதைப்பற்றி ஆராய்வோம்.

முஸ்லிம்கள் ஹிந்துப் பெரும்பான்மையினரின் ஆட்சியில் இருக்க விரும்பவில்லையானால், அவர்களை எதிரிகளாகக் கருதுவோம். ஜெர்மானியர்கள் யூதர்களை எதிரிகளாகக் கருதி நடாத்தி நசுக்கியதுபோல் நசுக்கிப் பிழிந்து ஒழித்துவிடுவோம் என்றெல்லாம் கொக்கரிக்கின்றதை முஸ்லிம்கள் கேட்காமலில்லை. ஆப்கானிஸ்தானமும் ஆதியில் ஹிந்துஸ்தானத்துடன் சேர்ந்ததுதான். ஆகையால் அதுகூட அகண்ட ஹிந்துஸ்தானத்தில் சேர்த்துக்கொள்ளப்படும் என்று தீர்மானித்து வருவதை முஸ்லிம்கள் படித்தேவருகின்றனர். மக்கா ஆலயம் நிறைய விக்ரஹங்கள் இருந்தன. அது ஹிந்து ஆலயம், முஹம்மது 1500 வருஷங்களுக்குமுன் அந்த விக்கிரஹங்களை உடைத்து ஒழித்து அவ் வாலயத்தைத் தனதாக்கிக்கொண்டு விக்கிரஹாராதனை செய்துவந்த அரபிய ஹிந்துக்களை பலவந்தமாக இஸ்லாத்தி லாக்கிக்கொண்டார். அராபிய தேசமனைத்தும் ஹிந்து மக்கள்; அதாவது விக்ரஹ ஆராதனை நிறைந்திருந்த தேசம். ஆகையால் அதையும் அகண்ட ஹிந்துஸ்தானத்துடன் சேர்த்து அந்தப் பண்டைய மக்கா கோவிலிலும் முன்போல விக்கிரஹத்தை வைத்து 'ஓம்' கொடியை நாட்டுவோம், என்றெல்லாம் தீர்மானித்துவருகின்றீர்கள் பஹிரங்கமாகவும், அந்தரங்கமாகவும் என்பதை முஸ்லிம்கள் அறிந்துகொள்ளாம லில்லை. சீனர்களும், ஜப்பானியரும், பர்மியரும் ஆதி ஹிந்து மதத்தினர் என்ற முறையில் அவர்கள் உதவிநாடியாவது அகண்ட ஹிந்துஸ்தானத்தை நிலைநாட்டுவதாக கங்கணங் கட்டி வருவது மறைவாகவில்லை. 30 கோடி ஹிந்துக்களின் எதிரில் சிதறிக்கிடக்கும் பத்துக் கோடி முஸ்லிம்கள் என்ன செய்யமுடியும் என்று நினைக்கின்றீர்கள். நவீன யுத்தப் பயிற்சிபெற்றுக்கொண்டு சிறுபான்மையினரான முஸ்லிம்களை துப்பாக்கி குண்டுகளைக் கொண்டு ஒடுக்கிவிடலாம் என்று மூன்ஜே போன்றவர் யுத்த பயிற்சி கலாசாலைகளை நியமிப்பதையும், அதற்கு கோடிக் கணக்கில் ஹிந்து சிற்றரசர்களும், பண மூட்டைகளும் உதவுவதை முஸ்லிம்கள் பார்த்தே வருகின்றனர். காந்தியார் அஹிம்ஸா தர்மப் போர்வையின் பின்பக்கத்தில் ஹிந்துக்களை ஹிம்ஸைக்குப் பழக்கி வருவதையும், 2 வருஷங்களுக்கு முன் தன் தந்திரத்தை பரிக்ஷித்துப் பார்த்ததையும் முஸ்லிம்கள் கண்டனுபவித்தே வருகின்றனர். நேப்பாள அரசரையும், கூர்க்க வீரர்களையும் போற்றிப்புகழ்ந்து முஸ்லிம்களுக்கு எதிராகத் தூண்டிவருவதையும் பார்த்துகொண்டுதான் வருகின்றனர். பர்மியர்களைத் தூண்டிவிட்டு, முஸ்லிம்களைத் தேடி அடையாளங் கண்டுகொள்ளும்படி தூண்டியதை முஸ்லிம்கள் மறந்துவிடவில்லை. முஸ்லிம்கள் எண்ணிக்கையைக் குறைக்க மிட்டாய் முதலிய உண்தின்பண்டங்களில் விஷத்தைக் கலந்து கொல்ல சூழ்ச்சி செய்வதை முஸ்லிம்கள் கவனிக்காமலில்லை.

இப்படி தீங்கள் செய்யும் அனைத்தையும் முஸ்லிம்கள் பொறுமையுடன் கவனித்தே வருகின்றனர். எதிர்த்து ஒன்றும் செய்யாத

அளவுக்கு அவர்கள் பிற்போக்கில் ஏழைக ளாக, கல்வி யறிவற்றவர்களாக, இருந்து தான் வருகின்றனர்.

என்றாலும், History repeats itself, சரித்திரம் சுழன்றுகொண்டே வருகின்றது. ஸ்பெயின் சம்பவ காலத்தில் இருந்த முஸ் லிம்களைப்போல் இல்லை, இன்றைக்கு இந் திய முஸ்லிம்கள். அங்கே அப்பொழுது முஸ்லிம்களின் முடியாட்சி இருந்தது. ஆனால் இன்று இஸ்லாமிய முடியாட்சி வரப் போகின்றது. அப்பொழுது முல்லாக்களின் ஆதிக்கத்தின் கீழிருந்தவர் முஸ்லிம்களும், அவர்களின் அரசர்களும்; ஆனால் இன்று முல்லாக்கள் மூலையிலடங்கிக் கிடக்கின்ற னர். சரியான தலைவர் அற்று அன்று இருந் தனர்; இன்று, தெய்வ கடாட்சத்தால், ஒரு அசைக்கமுடியாத Incorruptible ஜின்னா தலைவராக இருக்கின்றார். ஆகையால்...... என்ன முடிவென்பதை விளக்காமலே விளங்கிக் கொள்ளக் கிடக்கின்றது.

பாக்கிஸ்தான் கோருபவர்கள், ஹிந்துக்க ளல்ல, முஸ்லிம்கள் என்றேன். முஸ்லிம்களு க்கு வழிகாட்டி ஒருவர், முஹம்மது நபி— ஒருகாட்டரபி. இவர் ஒருவராக இருந்தார்; ஒரே கடவுளின் துணை கொண்டிருந்தார். உயிருக்கோடி அடைக்கலம் புகுந்தவர்; இருபது வருஷங்களுக்குள் ஒரு பரந்த தேச த்தின் ஏகச் சக்கிராதிபதியாக மாறினார். இவரை முன்காட்டியாக வழிகாட்டியாகக் கொண்டிருக்கின்றனர் இந்திய முஸலிம்கள்.

ஹிந்துக்கள் 60 கோடியினராக இருந்த வர்கள் 20 கோடியினராகக் கரைந்து மேய ந்து விட்டனர். திராவிடர்களும் ஆதிபாவி களும், ஆதிஹிந்துக்களும் சுமார் 10, 12 - கோடியினர் பஹிரங்கமாக ஹிந்துயிஸத் க்கு விரோதமாகக் கிளம்பி இருக்கின்றனர். ஹிந்துக்கள் நாடாகிய இந்தியா எப்பொழுது சுயேச்சையாக இருந்தது? விக்கிரமாதித் தன் காலத்தில் என்று கற்பனை மசயது காட்டுகின்றீர்கள்.

இவை யனைத்தையும் நிதானமாக சந்தித் துப் பாருங்கள். முஸ்லிம்களை பலவந்தப் படுத்த வேண்டாம். கற்பனை உலகத்தில், மேக மண்டலத்தில் இருக்க வேண்டாம்.

நீங்கள் பலவந்தம் செய்தால், நிர்ப்பந்தம் செய்தால் ஆப்கானியர், ஈரானியர், துருக்கி யர், அரபியர், எகிப்தியர், 30-40 கோடி முஸ்லிம்கள் கை கட்டிக் கொண்டிருப்பார் கள் என்று நினைக்கின்றீர்கள்.?

பலவந்தமாக வேண்டா வெறுப்புடன் ஒரு முஸ்லிம் அடக்கப் பட்டு வைத்திருப்பதால் சமாதானம் நிலைக்கு மென்று நினைக்கின் றீர்கள்? மதத்தின் பெயரால், கடவுள்களின் பெயரால், வேதத்தின் பெயரால், அடங்கியி ருந்த திராவிடர்கள் இப்பொழுது என்ன செய்துவருகின்றனர்? அம்பேத்கார் என்ன சொல்லுகின்றார் என்பதை சிந்தித்துப் பாருங்கள்.

ஆகையால் அவரவர்களின் உரிமையைக் கொடுத்துவிடுங்கள் முன்வந்து. அப்பொ ழுது சண்டைச் சச்சரவற்றுப் பிரிந்து போன சோதரர்களைப் போல ஒன்றித்து அயலானுக்கு இடங்கொடாமல் கௌரவ மாய் வாழலாம். நாங்கள் 9 சோதரர்கள்; எங்கள் தகப்பனருக்குப்பின் நாங்கள் கோர்ட் கச்சேரி ஏறுவோம் என்று, பொறு மை புழுக்கம் கொண்டவர்கள், எதிர்பா ர்த்து இருந்தனர். அவர்கள் ஏமாந்து போனார்கள் பதினைந்து துண்டாகப் பிரி தும் நாங்கள் ரெஜிஸ்ட்ரார் ஆபீஸுக்கும் போகாததைகண்டு. சில்லரை பிணக்குகள் ஏற்படத்தான் செய்கின்றது, என்றாலும், எதிரி தைரியங் கொள்ளுவதில்லை. எங்கள் விவகாரத்தில் தலையிடாக் காரணம், சமயத் தில் அவர்கள் குடும்ப கௌரவத்தை காப் பாற்ற ஒன்று சேர்ந்துவிடுவார்கள் என்று.

இதை ஒட்டியதே பாக்கிஸ்தான்—ஹிந் துஸ்தான் பிணக்கு.

பாக்கிஸ்தான் முஸ்லிம், அயலூர் முஸ் லிமை, காபூலியை, ஈரானியனை நுழைய விட்டுவிடுவானே என்பதுதான் உங்கள் முக்கியபயம். இப்படி பயந்து பயந்து எத் தனைகாலம் உயிர்வாழப் போகின்றீர்கள்; சதா அடிமையாக இருக்கப்போகின்றீர்கள்! முஸ்லிமை அடக்கி ஹிந்துஸ்தானத்துக் குள் வைத்துக்கொண்டிருப்பதால் ஆபத்தி அதிகமா, அவனையும் சமாதானத்துடன் சமத்துவத்துடன் நடாத்தினால் ஆபத்தி அதிகமா என்பதை சிந்தித்துப் பாருங்கள்.

எப்படியும் முஸ்லிம் பாக்கிஸ்தான் பெறப் போகின்றான்; அவன் அஹிம்சையில் நம் பிக்கையற்றவன், அவன் வேதம் சுயமரி யாதைக்காக, சுயேச்சைக்காக சமத்துவத் துவத்துக்காக கொல் சாவு' Kill-Get Killed என்று தூண்டிக்கொண்டிருக்கிறது. அது எதிரியின் மாதிரி மந்திரம் ஜபித்துக் கொண்டிரு என்று சொல்லவில்லை; அதைப் பேடித்தனம் என்று சபிக்கின்றது. ஆகை யால் சிந்தித்துப்பாருங்கள்.

---



# இரண்டு துன்பங்கள்

(குகன், எம். கே. குருசாமி)

வாழ்க்கையிலே, இரண்டு துன்பங்கள் ஏற்படுமாம். ஒன்று; "ஒரு பொருளை இச்சித்து, அதை அடைய முடியாதிருப்பது. இரண்டு; அதை அடைந்துவிடுவது"! என்று ஒரு அறிஞர் சொல்லியிருக்கின்றார். 'ஆனால் அவர் எதைக்குறித்து அப்படிச் சொன்னார்' என்பதை என்னால் அறியமுடியவில்லை. ஆனா லும் அவ்வறிஞர் சொல்லியிருப்பதை எனது வாழ்க்கையில் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அது ஓரளவு அல்ல அல்ல அநேக அளவு உண்மையாகத்தான் தென்படுகிறது. ஆம் எனது எழுபது வருட அனுபவத்தில் நடந்த சம்பவத்தில்தான் அந்த உண்மை வெளிப் பட்டது.

அப்போது எனக்கு வயது 16 தான் இரு க்கும். கவலையென்பதே இன்னதென்று தெரி யாமல் வாழ்ந்து கொண்டிருந்தேன். அப் போது எனது வாழ்வின் லக்ஷ்யம் படிப்பா கவே இருந்தது. ஓயாமல் படித்துக்கொண் டேயிருப்பேன். என்னுடைய வகுப்பில் மெர்ஸி என்ற ஓர் இளமாது படித்துக் கொண்டிருந்தாள். மெர்ஸி நல்ல அழகி. படிப்பிலும் கெட்டிக்காரிதான். அவளைக் காணும்போது மற்றப் பெண்களெல்லாம் பொறாமையடைவார்கள்.

அந்த வருட ஜனவரிப் பண்டிகையன்று நான் பொழுது போக்கிற்காக எங்கள் ஊரி லிருந்த ஒரு பெரிய பார்க்கிற்குச் சென் றேன். அங்கே ஒரு நல்ல இடத்தில் உட்கா ர்ந்துகொண்டு சிறிய சப்தத்தில் பாடிக் கொண்டிருந்தேன். அல்ல அல்ல கொலை பண்ணிக்கொண்டிருந்தேன். அப்படி நான் கொலை பண்ணியதால்தானோ என்னமோ என் பின்னால் உட்கார்ந்து கொண்டிருந்த யாரோ 'களுக்' கென்று சிறித்துவிட்டார். நான் அதிர்ச்சியுடன் திரும்பிப் பார்த்தேன். அங்கே மெர்ஸி தனியாக உட்கார்ந்து கொண்டிருந்தாள். அவளைக் கண்டவுடன் என்மனதில் ஏதோ ஒரு கலவரம் ஏற்பட் டது. அவளிடம் என்ன பேசுவதென்றும் தெரியவில்லை. ஆனால் ஏதாவது சொல் வோம் என்ற நினைவில், "என்ன மெர்ஸி சௌக்கியமா?" என்றேன்.

இதைக் கேட்டவுடன் மெர்ஸி கொல் லென்று சிரித்துவிட்டு, "என்ன ஜோசப், நீ என் வகுப்பிலேயே படித்துக்கொண்டு என் னுடைய சௌக்கியத்தைப் பற்றி தெரியா மல் இருக்கிறாயாக்கும்" என்றாள்.

நான் ஒரு அசட்டுச்சிரிப்புச் சிரித்துவிட்டு, பேசாமல் இருந்துவிட்டேன்.

அந்தச் சந்தர்ப்பத்துக்குப் பின் நான் தினந்தோறும் அந்தப் பார்க்கிற்குப்போவது வழக்கமாகிவிட்டது. மெர்ஸியும் வருவாள். இருவரும் வெகுநேரம் ஏதாவது வம்படித்து விட்டு வீடு திரும்புவோம்.

நாட்கள் உருண்டோடின. எனது கண் மெர்ஸியின்மீது பாய்ந்தது. ஆனால் என் உள்ளத்தைத் திறந்து காட்ட அரிய சந் தர்ப்பம் கிட்டவில்லை. அதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.......

...ஒரு நாள் நான் எனது சிறிய வீட்டில் உட்கார்ந்து படித்துக்கொண் டிருந்தேன். அப்போது இரவு ஒன்பதுமணி. எனது பெற் றோர்கள் மைகேல் மகனுக்குக் கலியாண மென்று அயலூர் சென்றுவிட்டனர். நான் படிப்பதில் கவனமாக இருக்கும்போது வா சல் கதவைத் திறந்துகொண்டு, மெர்ஸி உள்ளே நுழைந்தாள்.

"மெர்ஸி உன் வரவு அபூர்வமாயிருக்கே" என்றேன் புஸ்தகத்தை மடக்கி மேஜையின் மீது வைத்துவிட்டு.

"அபூர்வம்தான். வாத்தியார் கொடுத்த வீட்டுக் கணக்குகளை எழுதிக்கொண்டு வர வில்லை. நீ எழுதியிருந்தால் கொடு ஜோசப்" என்றாள்.

"ஊஹூம் நான் கொடுக்க மாட்டேன்" என்றேன். அவள் 'என்'? என்றாள். இருவ ருக்கும் தமாஷ் தர்க்கம் ஏற்பட்டுவிட்டது. அப்படி ஏற்பட்டும் நான் அதைக் கொடுக்க மறுத்தேவிட்டேன். இது மெர்ஸியின் மன தில் ஆத்திரத்தை மூட்டியிருக்கலாம்.

"போ! ஜோசப் உனக்குக்கொஞ்சமாவது இரக்கமென்பதே கிடையாது" என்றாள்.

"நானா இரக்கப்படவில்லை? பேஷ் நல்லா யோசித்துப்பார்" என்றேன்.

"அப்படியானால் நான் இரங்கவில்லையென் கிறாய் அதுதானே".

"ஆமாம்..."

"எந்த விஷயத்தில் ஜோசப். சொல்லு ஜோசப்" என்ருள்.

"சொன்னல் கோபப்படமாட்டாயே"

"ஊஹு—ம் உன்மேலா கோபப்படுவேன்?"

"அப்படியானல் சொல்லட்டுமா?"

"உம் சொல்லு" என்ருள்.

"மெர்ஸி! நீயோ பணக்காரி. நான் மிகுந்த ஏழையென்பது உனக்கு நன்ருய்த் தெரியும். ஆனுலும் நீ வித்தியாசம் பாராட்டமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். நான் உன்னை நேசிக்கிறேன். இந்த ஏழை உன்னைக் காதலிப்பதில் ஏதாவது தவறுதல் இருக்கா?" என்றேன்.

இதைக் கேட்டவுடன் மெர்ஸி தலைகுனிந்துகொண்டு, "அதிலென்னதவறுத? நானும் உண்மையிலேயே உன்னை நேசிக்கத்தான் செய்கிறேன்" என்ருள். நான் அவளை ஆச்சரியத்துடன் நோக்கினேன். அவள் ஓர் மெல்லிய சிரிப்புச் சிரித்துவிட்டு மௌனமாக நின்ருள். நான் மெதுவாக எழுந்து அவளருகே சென்றேன். அவள் என்னை அங்கீகரித்துவிட்டாள். நான் அவளது மெல்லிய கூந்தலைத் தடவிக்கொடுத்தேன். அன்றிலிருந்து எங்களது வாழ்வு ஆனந்தமயமாகவே இருந்தது.

பிற்பாடும் நாங்கள் பார்க்கியேதான் சந்தித்துப் பேசிவந்தோம். ஒருநாள் எங்களது காதல் சம்பாஷணைகளை மெர்ஸியினுடைய தகப்பன் மறைவிலிருந்து கேட்டுவிட்டார். அவருக்குக் கோபம் தாங்கவில்லை. மெர்ஸியை, என்னிடம் பேசக்கூடாது என்று கண்டித்துவைத்தார். ஆனுல் மெர்ஸி, என்னையே உறுதியாக மணக்கப் போவதாக தகப்பனிடம் வாதாடினுள். இது அவரது கோபத்தை எல்லைமீறச் செய்துவிட்டது. இனிமேல் நீ பள்ளிக்கும் போகவேண்டாம். வெளியேயும் போகக்கூடாது. என்று மெர்ஸியை அந்தப்புர ஸ்திரீயாக்கிவிட்டார். அது மட்டுமல்ல! மெர்ஸியை தனவந்தன் மகனை ராபர்ட்டுக்கு விவாகம் செய்விக்கப் போவதாகவும் குறித்தார். என்னுள்ளம் பதறியது. கண்ணிழந்து தவிக்கும் குபோதிபோலாகிவிட்டேன். இனி மெர்ஸி எனக்குக் கிடைப்பாள் என்றும் என்னல் எண்ண முடியவில்லை. அவ்ள்பால் கொண்ட காதல் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டேதான் இருந்





தது. ஆனுல் மெர்ஸி எப்படி இருக்கிருள் என்பதை என்னல் அறிய முடியவில்லை. ஆம்! அவள் அந்தப்புறத்தில் இருந்தாள்.

நான் அவளிடமிருந்து பிரிக்கப்பட்ட தினத்திலிருந்து, வாழ்க்கையில் எனக்கு சபலம் தட்டிவிட்டது. சதா கவலையும் நடுக்கமும்என்மனத்தினில்ஏற்பட்டன. எனது சந்தோஷங்களெல்லாம் எங்கோ ஓடி மறைந்துவிட்டன. மங்கிய எனது மனதிலெழுந்த அந்த லக்ஷியம் என்று ஈடேறுமோ? நினைக்குந்தோறும் நான் மிகுந்த பீதியடைந்தேன். எனது இதயத்திலெழுந்த சோகக் குமுறலையறியவும் ஒருவருமேயில்லை. ஆம்! நான் எத்தனை பேர்களிடம் எனது இதயத்தைத் திறந்து காட்டி, எனது மனத்துயரை வெளியிட்டென்? அது அளவிட முடியாதது. ஆனுல் எனது லக்ஷியத்தை அறிய ஒருவருமேயில்லை. வேடிக்கையும், சிரிப்பும், கேலியும் இகழ்வும் நிறைந்த இந்த ஈரமில்லாத உலகிலே, எனது சோகவிம்மல் ஒரு பொருட்டாக மதிக்கப் படாததில் ஆச்சரியமும் இல்லை.

எனது அநாதரவான நிலையை எண்ணி எண்ணி தினந்தோறும் கண்ணீர்விட்டேன். கலங்கினேன். உள்ளம் அலறினேன். மெர்ஸியை நினைந்து நினைந்து மெலிந்துவிட்டேன். அவளை அடைய முடியவில்லையே என்று எண்ணி எண்ணி, எனது நிம்மதியான சுவர்க்கத்திலிருந்து பிரித்து என்னை இவ் வாழ்க்கையில் வைத்திருக்கும் இவ்வுலகை எனது ஆத்திரம்தீர இரு கைகளாலும் பிய்த்துக் குத்தினேன். என்ன பயன்? நான் தினந்தோறும் கண்ணீர் விட்டேன். அப்போது அந்தக் கண்ணீரை ஒருவரும் அறிய முடியாது. ஆம்! நான் எத்தனையோ ஜனங்களுக்கு மத்தியில் குப்புற விழுந்துகொண்டு. கண்ணீர் விடுகின்றேன். ஆகவே மனித சமூகம் எனது சோகக் கண்ணீரைக் கவனித்திருக்க முடியாது.

எனது ஹிருதயத்தில் உள்ளவைகளையெல்லாம், எந்த இரக்கச் சிந்தையுள்ளவர்கள் மீதாவது விழுந்து முட்டி, முகந்து சொல்லி எனது இதய பாரத்தைக் குறைக்க வேண்டுமென்று இந்த ஏழை துடியாய்த் துடித்தேன். பிதற்றினேன். இன்னும் எனக்கு ஒருவரும் கிட்டவில்லையே. எனது மாபெரும் லக்ஷியம் எனது மனத்திலேயே புகைந்து சுற்றிவருகிறது. அப்புகை அவிந்து சர்வநாசமாகிவிட்டாலும் நான் நிச்சிந்தையாக இருப்பேன். ஆனுல் அப்புகை நாளுக்குநாள் பெருகிக்கொண்டு வரும்போது பாவி நான் என்ன செய்வேன். எனக்கு ஒரு வழியும் இல்லை. மெர்ஸியை அடையவேண்டுமென்ற அந்த ஒரு லக்ஷிய ஈடேற்றத்திற்காக எத்தனையோ மஹத்தான தியாகங்களெல்லாம் செய்யச் சித்தமாயிருந்தேன். ஆனுல் இவ் வேழையின் காதல் ஈடேற வகையில்லை. இப்போது நான் மெர்ஸியைப் பிரிந்து மூன்று வருடங்களாகிவிட்டன. ஐயோ எனக்கு 75 வருட ஆயுள் என்று ஜோதிடன் சொன்னனே! நான் அவளைப்பிரிந்த மூன்று வருடங்களின், ஒவ்வொருவிநாடியும் எனது பொறுமையைச் சோதித்துவந்தது. அந்த மூன்று வருடக் கவலையால், எனது பலத்தை இழந்தேன். ஆண்மையை இழந்தேன். ஆரோக்கியத்தை இழந்தேன். பொலிவையும் சந்தோஷத்தையும் இழந்தேன். வாழ்வே கசந்துவிட்டது. என்னை நானே வெறுத்துவிட்டேன். இனி தற்கொலைதான் முடிவு...

...மெர்ஸிக்கு இன்னும் விவாகமாகவில்லை. ஆம்! வேறு இடத்தில் மணம் செய்துகொள்வதற்கு மெர்ஸியே மறுத்துவிட்டாளாம். ஓஹோ! என்பால் கொண்ட காதல் நிலைபெற்றுவிட்டது போலும்.

திடீரென்று ஒருநாள், மெர்ஸியின் தந்தை என்னை யணுகி; மெர்ஸியை எனக்கு விவாகம் செய்விப்பதாகச் சொன்னர். எனக்கு மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது. ஆ! இன்று 8 நாட்களில் நானும் மெர்ஸியும் தம்பதிகளாகிவிடுவோம். இது எனது லக்ஷிய ஈடேற்றம்தான். சந்தோஷம் கொடுக்கும் விஷயம்தான். ஆனுல் எனது மனதில் கையைவைத்துச் சொன்னுல், "நான் மெர்ஸியின் வாழ்க்கையை வீணுக்கப்போவதாகத்தான் சொல்லவேண்டும். ஐயோ மெர்ஸி எவ்வளவு மனக்கோட்டைகள் கட்டுவாளோ? பாவம்!

எனக்கும் மெர்ஸிக்கும் கலியாணம் நடந்தது. அன்று மெர்ஸியின் முகத்தைப் பார்த்தேன். அவளது முகத்தில் அதிகமான சந்தோஷம் தாண்டவமாடிக்கொண்டிருந்தது, ஆனுல் எனது உள்ளம் ஏதோ ஒரு மாபாதகம் செய்துவிட்டதுபோல் உறுத்திக்கொண்டிருந்தது. மெர்ஸியின் மந்தகாச வதனத்தைக் காணும்போது, அவளது துன்ப வாழ்வும் எனது அகக்கண்கள்முன் தோன்றி என்னைச் சித்ரவதை செய்தது. நான் மெர்ஸியைக் காதலித்தபோதே, ஒருவிதத் தடங்கலுமின்றி அவளை யடைந்திருந்தால், இப்போது நான் வருந்தவேண்டிய அவசியமில்லை. இந்தக்கேடும் ஏற்பட்டிருக்காது. நானும் ஆனந்தித்திருப்பேன். ஆனுல் அவளை யடைய முடியாமல் மூன்று வருடங்களாக

அதிகமாகத் தவித்து அடைந் திருப்பதால் ஏற்பட்ட குறைவுதான் இது. நான் மெர்வியின் வாழ்வைக் கெடுத்துவிட்டேன். நான் பாதகன். ஆகவே மெர்வியின் வாழ்வு எப்படியாகும் என்பதை நான் இப்போதே சொல்ல முடியும். நான் அதை எதிர்பார்த்தேன். வீண்போகவில்லே. எனது அருமைக் காதலி மெர்வி அன்னிய புருஷனுடைய அணைப்பில் அமுங்கிக் கிடப்பதைக் கண்டேன். பல முறையும் கண்டேன்.

என் உள்ளம் உடைந்துவிட்டது. ஆனல் மெர்வியை நான் வெறுக்கவில்லே. கவலேயில்லாமல் வாழ்ந்து ஆண்மையுடன் விளங்கும் ஓர் வாலிபனுக்கு எனது கண்மணி மெர்வியைப் பறிகொடுத்துவிட்டேன். ஆம்! கவலேயினல் |ஆண்மையை இழந்த என்னிடம், மெர்வியால் இன்பமடைய முடியவில்லே. நான் கவலேயினல் சக்தியைப் பறிகொடுத்தவன். பாவம்! மெர்வியினுடைய பருவம் தனது இச்சையைப் பூர்த்திசெய்து கொள்ள எங்கோ போய்விட்டது. எனது தவிப்பும் இருமடங்காயின. உம்......இது தான் எனது வாழ்வில் ஏற்பட்ட இரு துன்பங்கள். அதாவது முதலில் அவளே அடைய முடியாமல் துன்புற்றேன். இரண்டாவது துன்புற்று ஆண்மையை இழந்தபின்பு அவளே அடைந்தும் அவளேப் பறிகொடுத்துவிட்டேன். இப்போது எனக்கு வயது 70 ஆகிவிட்டன. மெர்வி எங்கிருக்கிருளோ?

சுபம்.

---





# ஹஸரத் முஹ்யித்தீன் ஜீலானீ (ரஹ்) ஜீவியம்

*(கோட்டாறு, ஜனுப் S. A S. M. சுல்தான் சாஹிப்)*

இற்றைக்கு சுமார் எண்பது நூற்ருண்டுகளுக்கு முன் அதாவது ஹிஜிரி 470-ம் வருடம் ரமலான் மாதம் முதல் திகதி திங்கட்கிழமை யன்று ஈரானேச் சேர்ந்த தப்ரஸ்தான்என்னும பட்டணத்துக்கடுத்த ஜீலான் என்னும் நகரில் நம் பரிசுத்த இஸ்லா மதத்தின் ஸ்தாபகராகிய ரசூலே கரீம் முஹம்மத் (ஸல்) அவர்கள் வம்சத்திலுள்ள ஹஸ்ரத் முஹ்யித்தீன் அப்துல் காதிறு ஜீலானீ (ரஹ்) அவர்கள் அவதரித்தார்கள். இம்மஹானுபாவர் பிறக்கும் பொழுது தாயார் அவர்களின் வயது சுமார் அறுபது. இவ்வயோதிக வயதில் பெண்கள் கருக்கொண்டு குழந்தை பெறுவதே அபூர்வம் பிற்காலத்தில் நம் பெரியார் ஒரு மேலான பதவியை அடையக் கூடியவர்கள் என்பதை முன்னமே மக்களுக்கு அறிவிப்பான் வேண்டியே இறைவனும் அன்னேயின் மிகத் தளர்ந்த வயதாகிய அறுபதாவதுவயதில் இஸ்லாமிய புனருத்தாரணராகிய மகான் முஹ்யித்தீன் அப்துல் காதிறு ஜீலானீ பிறக்கச் செய்தான் போலும்! நம் பெரியார் பிறந்த அன்றுமுதல் ரமலான் ஆரம்ப மாதலால் பகற் காலங்களில் தாயாரிடம் பால் அருந்துவதில்லே. தம் அருமைப் புதல்வர் அமுதுண்ணு திருப்பதின் காரணமென்ன வென்பதை அன்னேயார் ஆரம்பத்தில் அறிந்து கொள்ள முடியாமல் நம் பெரியாருக்குப் பகற்காலங்களில் அமுதூட்ட எவ்வளவோ முயன்றும், பயன்படா தொழிந்தன. மேலும். நம் ஹஸ்ரத் அவர்களின் தாய்தந்தையர் ஆகிய இருவழியிலும் தோன்றிய மூதாதையர்கள் மதபக்தர்களாகவும், நல்லடியார்களாகவும், வலிமார்களாகவும் இருந்து வந்தார்கள். அத்துடன் தாய்வழிப் பாட்டனுராகிய செய்யிது அப்துல்லா சவுமயீ (ரஹ்) அவர்கள் அது காலேயுள்ள மதஅறிஞர்களில் சிறந்தவராக விளங்கினுர்கள்.

**இளமையும் கல்வியும்:**

இத்தகைய உத்தம வம்சத்திற் தோன்றிய தாய் தந்தையர்களின் புதல்வராகவும் பரன் நெறி வழுவா பக்தராகிய செய்யிது அப்துல்லா சவுமயீ (ரஹ்) அவர்களின் திருப்பேராகவும் அவதரித்த நம் "மார்க்கப் புனருத்தாரணர்" மிகச் சிறுபிராயத்திலேயே தந்தையை யிழந்து தாயார் அவர்களின் போஷணேயில் வளர்ந்து வந்தார்கள். இவ்வாறு தம் ஐந்தாவது வயது எத்தியவுடன் ஹஸ்ரத் அவர்களே "ஜீலான்" என்னும் நகரில் அதுகாலே பிரபல போதகாசிரியரா யிருந்த ஹஸ்ரத் அப்துல் ஜலீஸ் (ரஹ்) அவர்களிடம் ஆரம்பக் கல்விக்காக அனுப்பப்பட்டது. விளேயும் பயிர் முளேயிலே தெரியும் என்பதேபோல், தம் இளம் பருவத்தில் ஏனேய சிறுவர்களேப் போல் வீண் விளேயாட்டுகளில் பராக்கா யிருக்காமல் குர்ஆனேப பாராயணஞ் செய்வதிலும் மதக் கல்வியை கற்பதிலுமே கவனம் செலுத்தி வந்தார்கள். இவ்வாருக தங்கள் ஆரம்பக் கல்வியை ஒருவாறு ஜீலானில் முடித்துக் கொண்டு உயர்தரக்கல்வியின் பொருட்டு பக்தாத் நகரை நோக்கிப் புறப்படும் சமயம் அருமைத் தாயாரவர்கள் நம் அறிஞரை யழைத்து "என் அருமைகண்ணே! உம்முடைய ஆஸ்தியாகிய நாற்பது பொற்காசுகளும் இதோ இருக்கின்றன; நீர் எப்படிப்பட்ட அபாய சமயத்திலும் எக்காரணத்தை முன்னிட்டும் பொய் சொல்லக்கூடாது; உண்மையே உரைக்க வேண்டும்" என்று விடை கொடுத்தனுப்பினுர்கள்.

**பக்தாத்பிரயாணம்:**

நாகரிகமிகுந்த இக்காலத்தி லிருப்பதே போன்ற போக்கு வரவு சாதனங்களொன்றும் அக்காலத்தி லில்லாமையால், நம் அறிஞரவர்கள் பாதசாரியாகவே ஒரு வர்த்தகக் கோஷ்டியுடன் நடந்து "ஹமதான்" என்ற இடத்திற்குச் சிறிது அப்பால் சென்றவுடன் அறுபதுபோகளடங்கிய கொள்ளேக் கூட்ட மொன்று நம் பெரியாருடன் சென்ற கோஷ்டியை வழிமறித்துக் கொள்ளேயடித்தன. இறுதியாக நம் அறிஞரிடம் ஒரு திருடன் வந்து விளேயாட்டாக "உம்மிடம் என்ன இருக்கிறது?" என்று கேட்டான். அதுகாலே நம் அறிஞர் அவர்கள் என்னிடம் நாற்பது தங்கக் காசுகள் இருக்கின்றன என்று கூறினுர்கள் இது கேட்ட திருடன் நம் அறிஞரை தலேவனிடம் அழைத்துச் சென்று விஷயத்தைக் கூறினன். இது கேட்ட கள்வர் தலேவனும் உம்மிடம் நாற்பது பொற் காசுகள்

இருப்பது உண்மைதானா வென்று ஆச்சரியத்துடன் வினவிப் பரிசோதிக்கும் பொழுது, ஹஸ்ரத்தவர்கள் கூறியபடியே இருப்பதைக் கண்ட கள்வர்தலைவன் ஆச்சரியமும் அச்சமு மடைந்தவனாய் இத்தகைய பிராண ஹானி ஏற்படுஞ் சமயத்திலும் நீவிர் உண்மையே சொல்லக் காரணமென்ன வென்று வினவும் பொழுது நம் அறிஞரவர்கள் "எப்படிப்பட்ட அபாய சமயத்திலும் எக்காரணத்தை முன்னிட்டும் பொய்மொழி புகலக் கூடாது" என்று தம் தாயார் கூறி யிருப்பதனாலேயே தாம் உண்மை கூறியதாகச்சொன்னார்கள். இதகேட்டகள்வர் தலைவன், பெரியீர்! தாங்கள் உயிர் போவதாயினும் தாயார் சொல்லை மீறுவதில்லை யென்ற விரதத்தோடிருக்கிறீர்கள் ஆனால் நாங்களோ எல்லாம் வல்ல இறைவனுடைய சொல்லுக்கே முற்ற முற்ற மாறு செய்வதையே எங்கள் ஜென்மத் தொழிலாய்க் கொண்டிருக்கிறோ மெனப் பெரிதும் வருந்தி, நம் அறிஞரவர்களிடம் பாவ மன்னிப்பு (தவ்பா) செய்து தீக்ஷை பெற்றதோடு அந்தக் கோஷ்டியிடம் கொள்ளையிட்ட எல்லாப் பொருள்களையும் திருப்பிக் கொடுத்துவிட்டு "பக்தாத்," நகரம் வரை சிலரைத் துணையாகவும் அனுப்பிவைத்தான், இதுவே நம் அறிஞரவர்களின் வாழ்க்கையில் பகிரங்கமாய் நடைபெற்ற முதல் அற்புதமாகும். இவ்வாறு நம் அறிஞரவர்கள் ஹிஜிரி 488-ல் பக்தாத் நகரம் வந்து தக்க ஆசிரியர்களிடஞ்சென்று குர்ஆன், ஹதீஸ், பிக்ஹு, அகாபாத், உசூல், அதப் முதலிய கலைகளில் தேர்ச்சி பெற்றதோடு தியானத்தின் பாகங்களாகிய வணக்கங்களிலும் எட்டு வருடங்களில் தேர்ச்சிபெற்றுவிட்டு ஹிஜ்ரி 497-ல், பக்தாத் நகரின் பிரபல பெரியாராய் விளங்கிய ஷெய்குஅபூஸஈத்முபாரகல்மக்ரூமி (ரஹ்) அவர்களிடம் நம் ஞானசிரியர் தீக்ஷை பெற்ற பிறகு தமது எஞ்சிய காலத்தை இறை வணக்கத்திலும், தெய்வ வழிபாட்டிலும் கழிப்பதென்றமுடிவுடன் இராக்தேசத்து பயங்கரப் பாலைவனங்களில் இருபத்தைந்து வருடங்களாக இருந்துவிட்டார்கள்.

(தொடரும்)



# கலம்பகம்



### அபிராமம் :

1-12-'44. சனிக்கிழமை இரவு 9-30-மணிக்கு அபிராமம் முஸ்லீம் லீக் சார்பில் ஆலீ ஜனாப் மௌலவி முகமது மைதீன் ஆலிம் சாகிப் அவர்களின் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

ஜனாப் A. A. முகமது ஷரீப் அவர்கள் முஸ்லீம்களின் பொருளாதார நிலை, முஸ்லீம் தினசரி அவசியம் பற்றியும் இராமநாதபுரம் ஜில்லா முஸ்லீம் லீக் காரியதரிசி M. M. ஆதமூஸா அவர்கள், திருவாங்கூர் திவான் ஸர். ஸி, பி. டில்லியிலும், குடந்தையிலும் செய்த பிரசங்கத்தைக் கண்டித்தும் பேசினார்கள்.

ஸர். ஸி. பி தமிழ்., கோளா முஸ்லிம்கள் தங்கள் மத நூல்களை அரபிமொழியில் ஓதத் தெரியாது என்று பேசியதை கண்டித்தும் பாலஸ்தீனத்தில் ஓர் அரபி தேசீய சர்க்காரை ஏற்படுத்த வேண்டுமெனவும், பாலஸ்தீனத்தில் யூதர்கள் குடியேறுவதை தடுக்க வேண்டும் என்றும் தீர்மானங்கள் ஏக மனதாக நிறைவேற்றப் பட்டன.

பின் P. M A. ரஹ்மான் வந்தனம் கூற கூட்டம் இனிது முடிந்தது.

### முதுகுளத்தூர் :

2-12-'44. மாலை 5-மணிக்கு முதுகுளத்தூர் விற்பனை வரி ஆபீஸர் திரு. காசிராஜ் அவர்கள் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

அவ்வமயம் முதுகுளத்தூர் தாலூக்கா காட்பே போர் முன்னணி பிரசாரகர் திரு. A S. M. கனி சப்ரிஜிஸ்தார் திரு. தங்கம், திரு. கேம்ஸ் ஆகியவர்கள் சேமிப்புத் திட்டத்தின் அவசியம் பற்றி விரிவாகப் பேசினார்சள்.

"ஈட்டி."

### விருதுநகர் :

20-9-'44-ல் விருதுநகர் கல்லுப்பள்ளி மஸ்ஜிதில் நடந்த கூட்டத்தில் மக்கா மதீனா பஞ்ச நிவாரணத்திற்காக 14-கனவான்களடங்கிய கமிட்டி நியமிக்கப்பட்டு பணம் வசூல் செய்து 12-10-'44-ல் ரூ 175 மதராஸ் மக்கா மதீனா பஞ்ச நிவாரணக் கமிட்டி பொக்கிஷாதிபர் ஜனாப் ஈ. ஹாஜி அப்துர் ரஹ்மான் சாஹிப் அவர்களுக்கு அனுப்பப் பட்டது

(ஒரு நிருபர்)

### காயற் பட்டணம்:

தைக்கா கந்தூரி அழைப்பு: எப்பொருட்கு மிறைவனது கருணையை முன்னிட்டு நிகழும் ஹிஜ்ரி 1364 சபர் மாதத்தில் எங்கள் பாட்டனார் அல்ஆரிபுல் காமில் அஷ்ஷைகு அப்துல் காதிர் தைக்கா சாகிபு ஒலியுல்லா நாயகத்தின் கந்தூரியை வழக்கம் போல் நடத்த நியமித்திருப்பதால் 1உ முதல் காலையில் திரு குர்ஆன் ஷரீப் ஓதி தமாம் செய்தபின் நாஷ்தா புசித்து கஸீதத் அல்வித்ரியா புர்தா முதலான திருமத்ஹுகளையும் அலங்காரமாக ஓதப்பட்டு ஷீர்னி வழங்கப்படும். ஷை பிறை 14.க்குச் சரியான (28-1-'1945) ஞாயிற்றுக்கிழமை பின்னேரம் திங்கட்கிழமை இரவு நடைபெறும் ரூத்திபு திக்று மஜ்லிஸ் முதலிய சகல வைபவங்களுக்கும் தாங்கள் பந்துமித்திரர்களுடன் வந்து சிறப்பித்து காலையில் தபர்றுக்கையும் பெற்றுச் செல்லுமாறு விரும்பி அழைக்கிறோம்.

(பா சு முஹம்மதப்துல்லா லெப்பை, மானேஜர்.)

### கடைய நல்லூர் :

8-12-'44 இரவு உதுமானியா சங்க ஹாலில் சர்க்குண (ஸல்) அவர்கள் பேரில் மௌலித் ஷரீபு ஓதி முடிவில் தேனீர் தபற்றுக் முதலியவைகள் வழங்கப் பெற்று மறுநாள் காலை 7-30-மணி முதல் மாலை வரை உளளூர் வெளியூரிலுள்ள பிரபல முக்கியஸ்தர்களுக்கும், இதரர்களுக்கும் தாம்பூலம் கொடுக்கப்பெற்று, அன்றிரவு சங்க ஹாலில் 9-மணிக்கு மேல் மௌல்வீ ஹாபீஸ் H. S செய்யது மஸ்ஊது ஆலீம் சாஹிபு அவர்களின் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் S. K. செய்யது மஸ்ஊது சாஹிபு கிருஅத் ஓதினர். மௌல்வி H. S. O. முஹம்மது யூசுபு சாஹிபு ஷை சங்கத்திற்கு நன்கொடை யளித்து கனவான்களுக்கு நன்றி செலுத்தினர். மௌல்வி ஹாபீஸ். O. M S அப்துல்காதிர் சாஹிபு நூரிய்யீ "சங்கமும் அதன் நோக்கமும்" என்பது பற்றியும், ஹாபீஸ் S. A. கமாலுதீன் சாஹிபு "முஹர்ரமாதச் சிறப்பை" பற்றியும் K அப்துல்கனி சாஹிபு (மதராஸி) "சங்கத்தின் அவசியம்" என்பதுபற்றியும்

சொற்பொழிவாற்றினார்கள். பின்பு காரிய தரிசியால் வந்தனோபசாரம் கூறப்பெற்று கூட்டம் இனிது கலைவுற்றது.

(காரியதரிசி.)

**கமாலியா முஸ்லிம் சங்கம்:**

**11**-வது ஆண்டுவிழா:- 6-12-44-ல் புதன் மாலை 5-மணிக்கு தாருல் இஸ்லாம் மதரஸா ஹாலில் தென்காசி ஆலி ஜனாப் மு.ந- அப்துற் றஹ்மான் சாஹிப் பஹதூர் (ஜில்லா முஸ்லிம் லீக் பிரசிடெண்டு) அவர்கள் தலைமையில் கூடியதும் K. L M. அஹ்மது முஹையதீன் ஆலிம் சாஹிப் அவர்களால் கிருஅத் ஓதப்பட்டு சங்க அங்கத்தினர்கள் நாயக கீதம் பாடியதும் சபை ஆரம்பிக்கப் பட்டது தலைவர் முகவுரையாக முஸ்லிம் லீக்கின் லக்ஷியமும், முஸ்லிம்கள் எதிர் காலத்தில் எப்படி நடக்க வேண்டும் என்பதுபற்றிப் பேசினார்கள். ஜனாப் த. இ அப்துல்கரீம் சாஹிப் சங்க அறிக்கையை வாசித்தார்கள். மௌல்வி ஹாபீஸ் O M. S அப்துல் காதர் சாஹிப் நூரிய் ஈமானின் சக்தி என்பதுபற்றியும் திருச்சி வானொலி பிரசங்கி மௌல்வி குதுபுதீன் சாஹிப் அவர்கள் பாஜில் (பாக்கவி) தற்கால முஸ்லிம்களின் நிலை" என்பதுபற்றி தலைவர் முடிவுரைக்குப்பின் ஜனாப் த இ அப்துல்கரீம் சாஹிப் அவர்களால் வந்தனோபசாரம் கூறப்பட்டு 11-மணிக்கு கூட்டம் கலைவுற்றது.

(காரியதரிசி)



*Printed by K, Noorulla Sahib, at the Federal Press, 12, Appumaistry Street, G. T. Madras. and Edited and Published by Hafiz A. N. Md. Yusuf (Bagavi), 65, Broadway, G. T., Madras.*

REG. NO. 4193.

